TA-F-1

LYSMALL.P.exc CMY 12-OCT-96 16:58 BEEVEE 100

# ஹாய், குழந்தைகளே! ஸச்சின் மற்றும் உங்கள் பிரியமான கிரிக்கெட் வீரர்கள் ரஸ்னா ஸ்பிரெட் மேக்கருடன்



World Cup-96 Achievers Collection

**FREE**

**Cricketer Card With Every Pack**



ரூ. 13.50 மட்டும்




- சுவையானது
- சிக்கனமானது
- எளிதில் தயாரிக்கக் கூடியது



கிரிக்கெட் விளையாடும் குழந்தைகளே!

நீங்கள் விரும்பும் ரஸ்னா ஸ்பிரெட் மேக்கர் பேக்கைத் திறந்ததும் பரவசம் ஆரம்பமாகிறது. உங்கள் அம்மா இந்த சுவைமிக்க ஸ்பிரெட் மேக்கரால் உங்களுக்காக தயாரிக்கப்போகும் சுவையான பண்டங்களைப் பற்றி நாங்கள் பேசவில்லை. நீங்கள் விரும்பும் ஒவ்வொரு ரஸ்னா ஸ்பிரெட் மேக்கரிலும் ஒரு மனங்கவரும் கிரிக்கெட் வீரர் கார்டு உங்களுக்கென உள்ளது. அதுவும் **இலவசம்!**

இப்போது சுவைமிக்க ரஸ்னா ஸ்பிரெட் மேக்கரை ஸான்ட்விச், சப்பாத்தி அல்லது பூரியுடன் சுவைத்து மகிழ இன்னொரு காரணம். **இச்சலுகை இல்லாமலும் பேக்குகள் கிடைக்கின்றன.**

Mudra:EAMR:9543 Tam.





# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**


## கல்வியில் பெண்களுக்கும் சமஉரிமை

அண்மையில் நடந்த ஆசிரியர் தின விழாக்களிலும் உலக எழுத்தறிவிப்பு நாள் கொண்டாட்டங்களிலும் தலைவர்கள் பெண்களுக்குக் கல்வியில் சம உரிமை அளிக்க வேண்டுமெனக் கூறியுள்ளார்கள். காந்திஜீயும் "ஒரு ஆணுக்குத் கல்வி புகட்டினால் அது ஒருவனை மட்டும் உயர்த்தியதாகும். ஆனால் ஒரு பெண்ணுக்குக் கல்வி அளிப்பதால் ஒரு முழுக் குடும்பத்தையே உயர்த்த வழி செய்கிறோம்" என்ற பல ஆண்டுகளுக்கு முன்பே கருத்து தெரிவித்துள்ளார்.

முன்பெல்லாம் பள்ளிகளில் படிக்க வந்த பெண்கள் மிகக் குறைவே. அவர்களை வீட்டு வேலைகளில் மட்டும் பழக்கி மணம் செய்து வைத்து வந்தார்கள். பெண்கள் அதிகம் படித்து விட்டால் அவளுக்குச் சமமாகப் படித்த மாப்பிள்ளை கிடைப்பானோ என்ற பயமும் அதற்குக் காரணம்.

ஆனால் இன்று நிலை மாறி வருகிறது. இலவசக் கல்வி உபகாரச் சம்பளம் என்றெல்லாம் கிடைப்பதால் பெண்களும் ஆண்களுக்குச் சமமாகப் படிக்க முன் வருகிறார்கள். பெண்கள் தங்களுக்குள்ள இந்த உரிமையை விட்டு விடாமல் நிலை நாட்டிக் கொள்ள வேண்டும்.


**மதி முகம்: 99** **நவம்பர் 1996** **புன்னகை: 5**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**




# வேண்டும்! வேண்டும்!
# ரஸ்னா டிரிங்க்மேன்



"வேண்டும் வேண்டும் குளிர்ச்சி வேண்டும்
வேண்டும் வேண்டும் குடிக்க குளிர்ச்சி எப்போதும் வேண்டும்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் வேண்டும்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் ஸ்ட்ராவுடன்
வேண்டும் வேண்டும் டிரிங்க்மேன் என்னுடன்
வேண்டும் வேண்டும் விடுதலை வேண்டும்"

வந்துவிட்டது நண்பர்களே! ஒரு **ரஸ்னா**
டிரிங்க்மேன் வாட்டர் பாட்டில் இலவசமாகப்
பெறலாம். மூன்று 32 பேக்குகள்* ரஸ்னா ஸாஃப்ட்
டிரிங்க் கான்சென்ட்ரேட் வாங்கும்போது.

குளிர்ச்சியால் ஒன்று
குடிக்கலாம் எங்கேயும்,
எந்த நேரத்திலும்.
உடனே உங்கள்
அருகிலுள்ள டீலரை அணுகவும்.
துடிப்பான தலைமுறையுடன் இணையவும்.




Mudra:EAMR:9524 Tam.

செய்திகளும் தகவல்களும்

# இந்தியாவும் சிடிபிடியும்

இத்தலைப்பிலுள்ள சிடிபிடி என்ன என்று புரியாமல் விழிக்கிறீர்களா? 'காம்ப்ரஹென்சிவ் டெஸ்ட் பேன் ட்ரீட்டி' என்ற ஆங்கிலச் சொற்றொடரின் சுருக்கமே இது. அணு ஆயுதத் தடைக்கான பொது ஒப்பந்தம் என்பது இதன் பொருள். இந்த 'சிடிபிடி'யை ஐக்கிய நாடுகள் பொது சபை ஏற்க வேண்டுமென அண்மையில் அதன் கூட்டம் கூட்டப்பட்டது. அதற்கு முன் ஜூன் மாதத்தில் ஜெனீவாவில் கூடிய உலக நாடுகள் கூட்டத்தில் இதுபற்றி விவாதிக்கப்பட்டது. ஆனால் ஒருமித்த கருத்து உருவாகவில்லை.



அண்மையில் நடந்த ஐ.நா. கூட்டத்தில் ஆஸ்திரேலியா 'சிடிபிடி' பற்றி ஒரு தீர்மானத்தை கொண்டு வந்தது. இந்தியாவும் சில நாடுகளும் அதை எதிர்த்தன. ஆனால் அத்தீர்மானம் செப்டம்பர் 10ல் பெரும்பான்மை நாடுகளின் வாக்களிப்பால் நிறைவேற்றப்பட்டது. 185 உறுப்பினர் கொண்ட அச்சபையில் 158 நாடுகள் தீர்மானத்திற்கு ஆதரவாக வாக்களித்தன. இந்தியா, பூடான், லிபியா ஆகிய நாடுகள் எதிர்த்து வாக்களித்தன. ஐந்து நாடுகள் கூட்டத்திற்கு வரவில்லை. எஞ்சிய நாடுகள் நடுநிலைமை வகித்தன.

இந்தியா ஏன் இத்தீர்மானத்தை எதிர்த்தது? உலகின் ஐம்பெரு சக்தி நாடுகள் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், சீனா, ரஷ்யா. இவற்றிடம் அணு ஆயுதங்கள் உள்ளன. 44 நாடுகளுக்கு அணு ஆயுதங்களைத் தயாரிக்கும் திறமை உண்டு. இவற்றில் இந்தியாவும் ஒன்று. செப்டம்பர் கூட்டத்திற்கு முன் கூடிய கூட்டத்தில் இந்த ஒப்பந்தத்திற்கு மூன்று அடிப்படை லட்சியங்கள் வகுக்கப்பட்டன. எந்த நாடும் இனி அணு ஆயுதத்தைத் தயாரிக்கக் கூடாது என்பது ஒன்று. தற்போது அணு ஆயுதங்களை வைத்திருக்கும் நாடுகள் அவற்றை ஒரு குறிப்பிட்ட காலத்துள் அழித்து விட வேண்டும் என்பது இரண்டாவது. மூன்றாவது உலகில் அமைதியைக் காக்க வேண்டும் என்பது.

தற்போது நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தால் இந்த மூன்று லட்சியங்களைச் சிறிதளவு கூட அடைய முடியாது என்பதே இந்தியாவின் எதிர்ப்பிற்குக் காரணம். மற்ற நாடுகள் அணு ஆயுதங்களைத் தயாரிக்கக் கூடாது என்று கூறும் ஐந்து வல்லரசுகள் தம்மிடமுள்ள அணு ஆயுதங்களை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் அழிக்க ஒப்புக் கொள்ள வில்லை. அவை அந்த ஆயுதங்களைத் தம்மிடம் மட்டும் வைத்துக் கொள்ள விரும்புகின்றன. சீனாவும் பிரான்சும் இன்னமும் அணு ஆயுதப் பரிசோதனைகளை நடத்திக் கொண்டே இருக்கின்றன. இதைக்கூறி முதலாவது லட்சியம் கைகூடவில்லை என இந்தியா எடுத்துரைத்தது. இரண்டாவது லட்சியமான அணு ஆயுத ஒழிப்பிற்கும் வல்லரசுகள் இணங்கவில்லை. இந்நிலையில் மூன்றாவது லட்சியமான உலக அமைதியைக் காப்பாற்ற முடியாது எனக் கூறி இந்தியா ஆஸ்திரேலியாவின் தீர்மானத்தை எதிர்த்தது.

எல்லா நாடுகளும் இந்த ஒப்பந்தத்தில் மூன்று ஆண்டுகளுக்குள் கையொப்பமிட வேண்டுமென ஐ.நா. கூறுகிறது. இந்தியாவோ தான் ஒப்பந்தத்தில் கையொப்பமிடா விட்டாலும் தான் அணு ஆயுதங்களைத் தயாரிக்கப் போவதில்லை என்று அறிவித்துள்ளது. அணு சக்தியை அமைதிக்கான ஆக்க வேலைகளுக்கே இந்தியா பயன்படுத்தி வருவது யாவரும் அறிந்ததே.

இந்த ஒப்பந்தத்தில் கையொப்பமிடாத நாடுகளின் மீது ஐ.நா. என்ன நடவடிக்கை எடுக்கும் என்பது 1999ல்தான் தெரியும்.



# வணக்க விவகாரம்!

பொன்னூர் ஊராட்சி அதிகாரியாகப் பொன்னுசாமி வந்தான். அவனுக்குத் தான் என்ற அகம்பாவம் ண்டு. அவன் தன் கீழ் பணி புரியும் பழனியிடம் ''நான் ஊருக்குள் சுற்றி வரும் போது எனக்கு வணக்கம் செலுத்தாதவர்களிடம் நான் யார் என்பதை கூறி எனக்கு வணக்கம் செலுத்தும்படி நீ அவர்களிடம் கூற வேண்டும்'' என்று சொன்னான்.

அந்த ஊரில் முருகைய்யன் என்ற பணக்காரன் இருந்தான். அவன் நல்லவன். பிறருக்கு உதவுபவன். ஆனால் யாருக்கும் பணிந்து போகிறவனல்ல. அவனது கம்பீர நடை ஊராரை அவனுக்கு மரியாதை செய்து வைத்தது.

ஒரு நாள் பொன்னுசாமியும் அவனது பணியாளும் அவ்வூர்த் தெரு வழியே வந்த போது அவன் எதிரே வந்தவர்களெல்லாம் அவனுக்கு வணக்கம் செலுத்திவிட்டுச் சென்றார்கள். அப்போது அவன் எதிரே வந்த முருகைய்யன் அவனைச் சற்றும் லட்சியம் செய்யாமல் அவனைக் கடந்து செல்லலானான். அப்போது பொன்னுசாமி தன் பணியாளனைப் பார்க்கவே அவனும் குறிப்பறிந்து ஓடிப் போய் முருகைய்யனை வழி மறித்து ''ஐயா யாரென்று தங்களுக்குத் தெரிய வேண்டாமா? இவர்தான் இந்த ஊராட்சியின் புதிய அதிகாரி'' என்றான்.

அப்போது பொன்னுசாமி மிடுக்காகப் பார்க்கவே முருகைய்யனும் ''அப்படியா?'' என்று கூறி விட்டு மேலே நடக்கலானான். அப்போது பணியாள் ''நீங்கள் அவருக்கு வணக்கம் செலுத்தி இரண்டு வார்த்தை பேசுங்கள்'' என்றான். முருகைய்யனோ ''அவன் அதிகாரியாக இருந்தால் இருக்கட்டுமே, யாரோ புதிதாக வந்திருக்கிறான் என்று கேள்விப் பட்டேன். அவன்தானா இவன்? ஆள் வாட்ட சாட்டமாகத்தான் இருக்கிறான். ஆனால் இவனைப் பார்த்த

—சிவனார் செல்வன்—

தும் ''ஆளைக் கண்டு மயங்காதே, ஊது காமாலை'' என்ற பழமொழி தான் எனக்கு நினைவிற்கு வருகிறது. இதற்கு முன் இருந்த அதிகாரி உடல் நலம் குன்றியதால் தானே ஊரை விட்டுப் போனார்! ஆனால் அவருக்கு இந்த ஊர் மிகவும் பிடித்திருந்தது, ஊராரும் அவரை மிகவும் விரும்பினார்கள். இவனும் அந்த மாதிரி நல்லவிதமாக நடந்து ஊராருக்கு நன்மைகள் புரிந்து பெயர் வாங்க வேண்டும்'' என்றான்.

பொன்னுசாமியும் முருகைய்யன் பணியாளிடம் சொன்னதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான். முருகைய்யன் அதிகாரியான தனக்கு வணக்கம் செலுத்தாததோடு நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்று உபதேசம் செய்வது போலக் கூறியது பொன்னுசாமிக்கு ஆத்திரத்தையே அதிகரித்தது. பணியாளோ முருகைய்யனிடம் ''தாங்கள் இந்த அதிகாரியை முதல் தட்வையாக இப்போதுதான் பார்க்கிறீர்கள். நீங்கள் போய் வணங்கி அவ்ரது அறிமுகம் பெறுங்கள்'' என்றான்.

முருகைய்யனும் ''வணக்கமா? உன் அதிகாரிக்கா? இப்போது இந்த அதிர்ஷ்டம் அவனுக்கு இல்லை. இப்போது அவ்னுக்கு வணக்கம் செலுத்த அவசியமோ, அவசரமோ இல்லை. பிறகு பார்க்கலாம். இப்போது நான் அவனுக்கு வணக்கம் செலுத்தினால் அது உன் வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்ததாகத்தான் ஆகுமேயொழிய அவனுக்கு மரியாதை செய்ததாகாது'' என்றான்.

அப்போது அப்பணியாள் ''அப்படியானால் அவரே உங்களிடம் வந்து



வணக்கம் போடு என்று சொல்ல வேண்டுமென்று எதிர் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டான். முருகைய்யனும் ''இதோ பார், வணக்கம் என்பது ஒருவரிடம் காட்டும் மரியாதையால் செலுத்தப்படுவது. கேட்டு வாங்குவது அல்ல. இது உனக்கும் உன் அதிகாரிக்கும் தெரிய வேண்டும்'' என்று சற்று உரக்கவே பொன்னுசாமியின் காதில் விழ வேண்டுமென்று கூறினான்.

'பொன்னுசாமி அதைக் கேட்டு அவமானத்தால் தலை குனிந்து கொண்டான். அவன் முருகைய்யனை முறைத்துப் பார்த்தவாறே தன் பணியாளுடன் தன் வீட்டிற்கு உடனேயே சென்றான். அங்கு அவன் பழனியிடம் ''அந்த முருகைய்யனுக்கு எவ்வளவு திமிர்! என்னை மதிக்க



வில்லையே! அவனை என்ன செய் கிறேன் பார்'' என்று பொரிந்து தள்ளி னான். பழனியோ ''விஷயத்தை இப்படியே விட்டு விடுங்கள். முரு கைய்யன் கடவுளுக்கும் தன்னை விடப் பெரியவர்களுக்குமே வணக் கம் செலுத்துபவர். மற்ற எவரை யும் வணங்க மாட்டார். அவரோடு மோதிக் கொண்டால் உங்கள் மூக்கு தான் அறுபட்டு அவமானப்படுவீர் கள். ஊரில் எல்லோரும்தான் உங் களைப் பார்த்ததுமே வணங்குகிறார் களே. இவர் ஒருவரது வணக்கம் குறைவதால் கவலைப்படாதீர்கள்'' என்றான்.

பொன்னுசாமியோ ''நான் அதி காரி. அவன் எனக்கு மரியாதை காட் டாமல் போனால் அதற்கான தண் டனையை அவன் அனுபவிக்கத் தான் வேண்டும்'' என்று உறுமினான். பின்னர் அவன் முருகைய்யனைப் பற்றி ஊரில் விசாரித்தான். எல்லோ ருமே அவன் மிகவும் நல்லவன் என்றும், பிறருக்கு உதவுபவனென் றும், தப்பு தண்டாவுக்குப் போகாத வனென்றும், ஆபத்திலுள்ளவனைத் தன்னுயிரைக் கொடுத்தாவது காக்க முயல்வான் என்றும் கூறினார்கள். அவனை எப்படி பயமுறுத்துவது எனப் பொன்னுசாமி யோசிக்கலா னான்.

அவனுக்கு ஒரு வழி தெரிந்தது. அதன்படி ஆறுமுகம் என்பவனை அழைத்து அவன் முருகைய்யனைக் கண்டு என்ன சொல்ல வேண்டும் என் பதைச் சொல்லி அனுப்பினான். ஆறு முகமும் முருகைய்யனைக் கண்டு ''ஐயா! ஊராட்சி அதிகாரி பொன்னு சாமியை நான் காணும் போதெல்லாம் வணக்கம் செலுத்துபவன். ஒருநாள் ஏதோ யோசனையில் அவரைக்கண்ட போது அவருக்கு வணக்கம் செலுத்த மறந்து விட்டேன். அதனால் அவர் என் மீது கடுங் கோபம் கொண்டு நான் வருட முடிவில் செலுத்த வேண்டிய வரியை உடனேயே முழுவதுமாகக் கட்ட வேண்டுமென்று உத்திரவிட்டு விட்டார்'' என்றான்.

அப்போது முருகைய்யன் ''அது சரி. நீ அவரைப் பார்க்கும் போதெல் லாம் ஏன் வணக்கம் செலுத்த வேண் டும்? இப்படி ஒரு வழக்கத்தை நீ ஏற் படுத்திவிட்டு இப்போது வருந்துவ தால் என்ன பயன்? நான் பணம் இப் போது கொடுக்கிறேன். வரியைக் கட்டு. பிறகு சாவகாசமாக நீ பணத்தை எனக்குத் திருப்பிக் கொடுக்கலாம்.

இனிமேல் அந்த அதிகாரியைப் பார்த்தாலும் வணக்கம் செலுத்தாதே'' என்றான்.

அவனும் ''அதிகாரிக்கு வணக்கம் செலுத்துவதால் என்ன தவறு?'' என்று கேட்டான். முருகைய்யனும் ''தினமும் வணக்கம் செலுத்தும் ஒருவன் ஒருநாள் வணக்கம் செலுத்த மறந்து விட்டால் அது குற்றம். என்றுமே வணக்கம் செலுத்தாதவன் ஒருமுறை வணக்கம் செலுத்தி விட்டால் அது பெரும் மகிழ்ச்சியை அளிக்கிறது. அதிகாரியிடம் ஏதாவது வேலையாகச் சென்றாலே வணக்கம் செலுத்த வேண்டும். அதற்குப் பயன் உண்டு. மற்ற வேளைகளில் வணங்குவது வீணே. இதை நீ தெரிந்து கொள்'' என்றான். இதை ஆறுமுகம் போய்ப் பொன்னுசாமியிடம் சொல்வதற்குள் முருகைய்யன் ஆறுமுகத்திடம் சொன்னது ஊர் பூராவும் பரவிவிட்டது. அதனால் அன்று முதல் அந்த ஊரார் பொன்னுசாமியை வழியில் கண்டும் வணக்கம் செலுத்தாமலே போகலானார்கள்.

தான் முருகைய்யனை பயமுறுத்தப் போட்ட திட்டம் பலிக்காது போனதும் அது தனக்கே நேர் எதிராகப் போனதும் கண்டு பொன்னுசாமி தன் கௌரவமே போய்விட்டதாக எண்ணி மனமொடிந்து போனான். அப்போது ஒருநாள் முருகைய்யனின் பேரனை நல்ல பாம்பு தீண்டி விட்டது. அவன் அலறியவாறே விழுந்தான். முருகைய்யனின் மகன் வைத்தியரை அழைத்து வர ஓடினான். இந்த செய்தியை அறிந்து பொன்னுசாமி ''எனக்குப் பாம்பின் விஷத்தைப் போக்கும் மந்திரம் தெரியும். அந்த முருகைய்யன் வந்து என்னை வணங்கி வேண்டினால் நான் அவனது பேரனது உயிரைக் காப்பேன்'' என்றான்.

இதைக் கேட்டும் முருகைய்யன் பொன்னுசாமியைக் காணச் செல்ல



வில்லை. அதனால் ஒன்றும் நஷ்டம் ஏற்பட்டு விடவில்லை. அவனது பேரன் வைத்தியரின் மருந்தால் உயிர் பிழைத்து விட்டான். முருகையன் பிடிவாதமாகப் பொன்னுசாமிக்கு வணக்கம் செலுத்தாமல் இருப்பதைச் சிலர் கண்டித்தனர்.

சில நாட்களுக்குப் பின் முருகையனின் வயலில் வேலை செய்யும் ஒருவனைப் பாம்பு கடித்து விட்டது. உடனே வைத்தியரை அழைத்துவர ஒருவன் ஓடினான். சிலர் முருகையனிடம் ''அந்த அதிகாரியை அழைத்து வந்து மந்திரம் போட வைத்தால் விஷம் இறங்கி இவன் பிழைத்து விடுவான்'' என்று கூறினார்கள்.

முருகையனும் ''இப்போது என் வேலையாளைக் காப்பாற்ற வேண்டியது என் கடமை. இதற்காகப் பொன்னுசாமியிடம் போய் அவனை வணங்கி அழைத்து வருகிறேன். வைத்தியர் வந்தால் மருந்தைக் கொடுக்கச் சொல்லுங்கள்'' என்று கூறி விட்டு பொன்னுசாமியைக் காணச் சென்றான்.

முருகையன் பொன்னுசாமியைக் கண்டு வணங்கி ''என் வயலில் வேலை செய்யும் ஒருவனைப் பாம்பு கடித்து விட்டது. உங்களுக்கு விஷக் கடி மந்திரம் தெரியுமாமே. நீங்கள் வந்து அவனது உயிரைக் காப்பாற்றுங்கள்'' என்று வேண்டினான். பொன்னுசாமி வெல வெலத்துப் போனான். அவன் முருகையனிடம் ''அன்று உங்கள் பேரனைப் பாம்பு தீண்டிய போது நீங்கள் வந்து என்னை வணங்க வேண்டும் என்பதற்காக எனக்கு விஷக்கடி மந்திரம் தெரியுமென்று பொய்யாகக் கூறினேன். நீங்கள் அன்று உங்கள் பேரனைக் காக்கக் கூப்பிடாமல் இன்று உங்கள் வேலையாளைக் காக்க ஓடி வந்திருக்கிறீர்கள். உங்கள் முன் நிற்கவே நான் வெட்கப்படுகிறேன். நான் மந்திரிக்கிறேன் என்று கூறி ஏதாவது செய்தால் அது விபரீதமாகி விடுமே'' என்றான். முருகையன் திரும்பிச் சென்றான். அவனது வேலையாள் வைத்தியரின் மருந்தால் பிழைத்து விட்டான்.

அன்று முதல் பொன்னுசாமி தான் முருகையனைக் கண்டதும் வணக்கம் செலுத்தி வரலானான்.





# கடன் வசூலித்த விதம்!

லெட்சுமணன் என்ற வட்டிக் கடைக்காரரிடம் குப்பன் என்பவன் கடன் வாங்கிக் கொண்டு அதைத் திருப்பிக் கொடுக்காமலேயே இருந்தான். வட்டியோடு சேர்த்து அது ஆயிரம் ரூபாயாகி விட்டது. லெட்சுமணன் எவ்வளவோ முயன்றும் அந்தக் கடனைக் குப்பனிடமிருந்து வசூலிக்க முடியவில்லை.

இந்நிலையில் அப்பகுதி ஜமீன்தாரருக்கு நம்பிக்கையான ஒரு கணக்கர் தேவைப்பட்டது. அவருக்கு லெட்சுமணனை நன்கு தெரியும். அதனால் ஒரு நம்பிக்கையான ஆளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்படி ஜமீன்தாரர் கேட்டுக் கொண்டார். அதை அறிந்து கணபதி, பசுபதி என்ற இரு இளைஞர்கள் லெட்சுமணனிடம் வந்து ஜமீன் வேலைக்கு தம்மை சிபாரிசு செய்யும்படி வேண்டினார்கள்.

லெட்சுமணன் அவர்களை நன்கு அறிந்தவர். அதனால் அவர் ''ஜமீன் வேலையில் வரி வசூலிப்புதான் அதிகம். எனவே வர வேண்டிய பணத்தை நீங்கள் வசூலிபீர்களா என்று பார்க்க உங்கள் இருவருக்கும் ஒரு பரீட்சை வைக்கிறேன். இவ்வூரிலுள்ள குப்பன் என்பவன் என் கடன் ஆயிரம் ரூபாயை நெடு நாட்களாகத் திருப்பிக் கொடுக்காமலேயே இருக்கிறான். நான் எவ்வளவோ முயன்ற போதிலும் கடனை அவனிடமிருந்து வசூலிக்க முடியவில்லை. அதை உங்களில் யார் வசூலித்து வருகிறீர்களோ அவனை ஜமீன் வேலைக்குச் சிபாரிசு செய்கிறேன்'' என்றான்.

கணபதியும் பசுபதியும் அதைச் செய்வதாகச் சொல்லிவிட்டுச் சென்றார்கள். இரண்டு நாட்கள் கழித்து இருவரும் வந்து லெட்சுமணனைக் கண்டார்கள். கணபதி அசட்டுச்சிரிப்புடன் ''என்னால் கடனை வசூலிக்க முடியவில்லை. அந்தக் குப்பனிடமிருந்து பணத்தை வசூலிப்பது என்றால் கல்லி

—எஸ். சுதா—

லிருந்து நார் உரிப்பது போலத்தானே'' என்று கூறி நின்றான். பசுபதியோ ''நான் வசூலித்து விட்டேன்'' என்று கூறி ஆயிரம் ரூபாயை அவர் முன் வைத்தான்.

லெட்சுமணன் அது கண்டு மகிழ்ந்து ''சபாஷ். நீ நாளைக்கே போய் ஜமீன் வேலையை ஏற்கலாம். நான் ஜமீன்தாரரிடம் உன்னைப் பற்றி சொல்கிறேன்'' என்றார். கணபதியும் பசுபதியும் அவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள். வழியில் கணபதி பசுபதியிடம் ''நீ எப்படி அந்த கல்லுணி மங்கனிடமிருந்து பணத்தை வசூலித்தாய்? என்ன முயன்றும் என்னால் முடியவில்லையே'' என்று கேட்டான்.

பசுபதியும் ''குப்பன் யாரிடம் பணம் வாங்கினாலும் அதைத் திருப்பிக் கொடுக்கும் பழக்கம் இல்லாதவன். அதனால் நான் அவனுக்கு இரண்டாயிரம் ரூபாய் கடன் கொடுப்பதாயும் ஆனால் அவன் லெட்சுமணனுக்குக் கொடுக்க வேண்டிய ஆயிரம் ரூபாயை அப்போதே என்னிடம் கொடுத்து விட வேண்டும் என்று நிபந்தனை விதித்தேன். அவனும் இரண்டாயிரத்துக்குக் கடன் பத்திரம் எழுதி எனக்குக் கொடுத்து விட்டு ஆயிரம் ரூபாயை வாங்கிக் கொண்டு மீதி ஆயிரத்தை லெட்சுமணனிடம் கொடுக்கும் படிக் கூறிவிட்டான். இப்படியாக லெட்சுமணனின் கடன் வசூலாகி விட்டது'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

அப்போது கணபதி ''அப்படியானால் குப்பன் உனக்குக் கொடுக்க வேண்டிய இரண்டாயிரம் ரூபாயை எப்படி வசூலிக்கப் போகிறாய்?'' என்று கேட்டான். பசுபதியும் ''நான் ஜமீன் அதிகாரியாகி விடுவேனே. இந்தக் குப்பனின் நிலங்கள் பற்றிய விவரங்களை எல்லாம் நான் விசாரித்தேன். அப்போது இவன் பல வருடங்களாக வரி கட்டாமலும், தன் நில சம்பந்தமாக ஒரு வழக்கில் சிக்கியுள்ளதும் தெரிந்தது. அந்த வழக்கு ஜமீனில் தீர்க்கப்படாமல் உள்ளது. அதைக் காட்டி குப்பனிடமிருந்து என் கடனை வசூலித்து விடுவேன்'' என்றான்.

அப்போது கணபதி ''உண்மையிலேயே நீதான் இந்த ஜமீன் வேலையைப் பெறத் தகுதி பெற்றவன்'' என்று கூறி அவனைப் பாராட்டினான்.






## 16

(ரூபதரன் இருபது ஆண்டுகளுக்குப் பின் தன் அரண்மனைக்குள் செல்ல கிழ பிச்சைக்காரனின் வேடம் அணியவே வேண்டியதாயிற்று. அந்த விஷயம் அவனது மகன் தீரமதிக்கு மட்டுமே தெரியும். ரூபதரனின் மனைவி பத்மமுகியை மணக்க அவளது வீட்டில் கூடிய கயவர்கள் கிழப் பிச்சைக்காரனை அவமானப் படுத்தினர். அதை ரூபதரன் பொறுத்துக் கொண்டு பழி வாங்கத் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அன்றிரவு எல்லோரும் அந்த இடத்தை விட்டுச் சென்ற பின் ரூபதரனும் தீரமதியுமே மிகுந்திருந்தனர். அப்போது—)

ரூபதரன் தீரமதியிடம் ''மகனே! சுவர் மீது மாட்டப்பட்டிருக்கும் ஆயுதங்களை எல்லாம் எடுத்து சாமான்கள் வைக்கும் அறையில் மறைத்து வை. யாராவது கேட்டால் அவற்றை நீ பத்திரப்படுத்தி வைத்திருப்பதாகக் கூறி விடு'' என்றான். தீரமதி தன் தாயின் பணிப்பெண்களில் மிகவும் வயதான பகுகீர்த்தி என்பவளை அழைத்து ''பாட்டீ! பணிப் பெண்களையெல்லாம் தம் அறைகளுக்குள் போய்க் கதவுகளை உட்புறம் தாளிட்டுக் கொள்ளும் படிக் கூறி விடு. என் தந்தை போனபின் அவரது ஆயுதங்களெல்லாம் கவனிப்பாரற்று தூசி படிந்து கிடக்கின்றன. அவற்றைப் பாதுகாக்க வேண்டியது என் கடமை'' என்றான்.

அவளும் ''உன்னை நான் சிறு வயது முதல் வளர்த்து வந்தேன். இப்போது வளர்ந்து பெரியவனாகி விட்டாய். இப்போது உன் தந்தை விட்டுப் போன ஆயுதங்களை எல்லாம் எடுத்துத் துடைத்து வைப்பதாகச் சொன்ன



போட்டு கூடத்தைக் மேலும் கதகதப் பாக்கினார்கள். ஒரு பணிப்பெண் ரூப தரனைப் பார்த்து ''இன்னும் நீ இங் கேயே இருக்கிறாயா? சாப்பிட்டது போதாதா?'' என்று குத்தலாகக் கேட் டாள்.

அவளை பத்மமுகி கடிந்து கொண்டு ''வாயை மூடு. யாரிடம் எப்படிப் பேச வேண்டும் என்பதைத் தெரிந்து கொள். அவர் கிழவர். உன்னை விட வயதில் பெரியவர். மேலும் அவர் நம் வீட்டிற்கு வந்தார் என்றால் இவர் நம் விருந்தாளியா கிறார். விருந்தாளியை அவமதிப் பதா? என்னைப் பற்றி நீ அறிந்தவள் தானே? நான் இவரோடு பேச வந் திருக்கிறேன் என்று தெரிந்தும் இப் படிப் பிதற்றுகிறாயா?'' என்று மிரட் டினாள். பின்னர் தன்னெதிரே ஒரு நாற்காலியைப் போடச் சொல்லி பிச்சைக்காரன் வேடத்திலுள்ள ரூப தரனை அழைத்து அதில் உட்கார வைத்தாள். அவன் அதில் அமர்ந்த தும் அவள் ''ஐயா! தாங்கள் யாரோ? நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?'' என்று கேட்டான்.

ரூபதரனும் தன்னைப் பற்றி ஏதோ ஒரு கற்பனைக் கதையைக் கூறி தன் நாடு சிசிலி என்றும் ரூபதரன் போருக் குப் போகு முன் தன் விருந்தினனாக இருந்தான் என்றும் கூறினான். அவளை நம்ப வைக்க அவன் ரூபதரன் அணிந்திருந்த ஆடைகளை வர்ணித் தான். அந்த வர்ணனையைக் கேட்டு பத்மமுகி அக்கிழவன் கூறியது எல் லாம் உண்மையே என்று நம்பித் திருப்தி அடைந்தாள். அவள் பகுகீர்த் தியை அழைத்து ''இவர் உன் எஜ

தைக் கேட்டு எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படுகிறது தெரியுமா? இதுபோல உன் தந்தைக்குச் சொந்த மான மற்ற பொருள்களையும் பாது காக்க வேண்டும். இப்போது பெரிய வனாகி விட்டதால் நீ இனி பொறுப்பை ஏற்பது சரியே'' என் றாள். அவள் அங்கிருந்து சென்றதும் தீரமதியும் ரூபதரனும் சுவரில் தொங் கிய ஆயுதங்களையும் கவசங்களை யும் எடுத்து சாமான்கள் போடும் அறைக்குள் வைத்தார்கள். இதன் பிறகு தீரமதி ரூபதரனை அங்கு ஓரிடத் தில் படுக்கச் சொல்லி விட்டுத் தன் அறைக்குச் சென்றான்.

பத்மமுகி தன் அறையிலிருந்து வந்து அந்தக் கூடத்து நாற்காலி ஒன் றில் அமர்ந்தாள். பணிப்பெண்கள் கட்டைகளை எரியும் நெருப்பில்

மானனின் நண்பர். இவரைத் தக்க படி உபசரித்து மரியாதை செய்'' எனக் கட்டளை இட்டாள்.

பகுகீர்த்தியும் அவனுக்குக் கால் கழுவ நீர் கொடுத்தாள். ரூபதரன் காலை அலம்பும் போது அவனது காலில் இருந்த தழும்பைக் கண்டு தன் கையிலிருந்த தண்ணீர்ப் பாத்திரத்தைத் 'தொப்'பெனக் கீழே போட்டாள். ஏனெனில் அவள் ரூபதரனை அடையாளம் கண்டு கொண்டாள். அவள் 'ஆ'வெனக் கத்த முயன்ற போது ரூபதரன் அவளது வாயைச் சட்டென மூடி ''என்னை இப்போது வெளிப்படுத்தி ஆபத்தில் மாட்டி விட்டு விடாதே. இருபது ஆண்டுகள் கஷ்டப்பட்டு விட்டுத் திரும்பி வந்திருக்கிறேன். இன்னும் சிறிது பொறுமையுடன் இரு. நானே என்னை இன்னானென அறிவிக்கிறேன்'' என்றான். பகுகீர்த்தியும் அவ்விதமே செய்வதாகக் கூறி வேறு நீர் எடுத்து வரச் சென்றாள்.

பகுகீர்த்தி கண்ட தழும்பு ரூபதரனுக்குப் பல ஆண்டுகளுக்கு முன் ஒரு வேட்டையின் போது ஒரு காட்டுப் பன்றி அவனைத் தாக்கிய போது ஏற்பட்டது. ரூபதரன் ஒருமுறை காட்டில் வேட்டையாடச் சென்றான். அங்கு அவன் ஒரு முரட்டுக் காட்டுப் பன்றியை எதிர்க்க வேண்டியதாயிற்று. அதனை அடக்க முயன்றபோது அது தன் கூரிய மூக்கால் அவனது காலைக் குத்தி காயப்படுத்தியது. அவன் அப்பன்றியைக் கொன்று விட்டுத்தான் வேட்டையிலிருந்து திரும்பி வந்தான். வீடு திரும்பிய அவ னுக்கு காயத்தில் மருந்து தடவியவள் பகுகீர்த்தியே.



பகுகீர்த்தி ரூபதரனை இப்போது அடையாளம் கண்டு கொண்டதைப் பத்மமுகி அறியவில்லை.

ரூபதரன் கால் அலம்பிக் கொண்டு திரும்பி வந்ததும் அவள் அவனிடம் ''ஐயா! இப்போது நான் ஒரு சிக்கலான பிரச்னையில் இருக்கிறேன். என் மகன் வளர்ந்து பெரியவனாகி விட்டான். அவனுக்கு அவனது சொத்தைக் கொடுக்க வேண்டும். ஆனால் என் கணவர் என்ன ஆனார் எனத் தெரியாது. இந்த அரசகுமாரர்களோ அவர் இறந்து விட்டதாகக் கூறி என்னை மணக்க விரும்புகிறார்கள். இந்த வீட்டில் இருந்து தின்று குடித்து எங்கள் சொத்தையெல்லாம் கரைத்து வருகிறார்கள். இது என் மகனுக்கு மிகுந்த வேதனையை அளிக்கிறது. இதற்கு ஒரு வழி காண நான் ஒரு திட்டம்

போட்டிருக்கிறேன். என் கணவர் பன்னிரெண்டு கோடாலித் தலைகளை ஒன்றன் பக்கம் மற்றதை வைத்து அதனால் ஏற்படும் நீள ஓட்டை வழியாக அம்பை எய்து மறுபுறம் போய் விழ வைக்கும் திறமை பெற்றவர். இப்போது அவ்வாறு செய்து காட்டும் அரசகுமாரனை மணக்கப் போவதாக அறிவிக்கப் போகிறேன்'' என்றாள்.

ரூபதரனும் ''ஆகா! இது சரியான பரீட்சைதான். இவ்வாறு செய்யக் கூடியவர் உங்கள் கணவர்தான் என்று கூறுவதால் அவருக்குச் சமமாக உள்ள ஒருவரைத்தான் நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். இப்பரீட்சையையே வைத்துப் பாருங்கள். யார் அதில் தேர்கிறார்களெனப் பார்க்கலாம்'' என்றான்.

அதன் பின் பத்மமுகி தன் அறைக்குச் செல்லவே ரூபதரன் அந்தக் கூடத்திலேயே ஒரு ஆட்டுத் தோலை எடுத்து விரித்துப் படுத்துக் கொண்டான். அவன் தூக்கம் பிடிக்காமல் விடியும்வரை அந்தக்கயவர்களை எப்படிப் பழி வாங்குவது என்று யோசித்துக் கொண்டிருந்தான்.

காலையானதும் எல்லோரும் தம் வேலைகளில் மூழ்கினார்கள். பன்றி மேய்ப்பவன் மூன்று பன்றிகளை ஓட்டி வந்தான். அவன் ரூபதரனைக் கண்டு ''இங்கு எல்லாம் வசதியாக இருந்ததா?'' என்று கேட்டான். ரூபதரனும் ''உம். இங்கே இருந்தவர்கள் படு போக்கிரிகள். அவர்களைக் கடவுள் தான் தண்டிக்க வேண்டும்'' என்றான். அப்போது ஆடு மேய்க்கும் காலன் அங்கு வந்தான். அவன் தான் ஓட்டி வந்த ஆடுகளை ஓரிடத்தில் கட்டி விட்டு ரூபதரனைப் பார்த்து ''நீ இன்னமும் இங்கேதான் இருக்கிறாயா?'' என்று கேட்டான்.

ரூபதரன் பதில் கூறவில்லை. அப்போது சுகப்பிராப்தி என்பவன் அங்கு வந்தான். அவன் ரூபதரனைக் கண்டு



அவன் யாரெனப் பன்றி மேய்ப்பவனிடம் கேட்டான். ஏனெனில் அவன் மனதில் அக்கிழவன் ரூபதரனைப் போல இருக்கிறானே என்று சந்தேகம் எழுந்தது. அவன் ரூபதரனிடம் ''ஐயா! உங்களைக்கண்டதும் ஏனோ என் மனதில் பயபக்தி தோன்றுகிறது. ஏனெனில் உங்கள் கண்களும், நடையும் என் எஜமானருடையதைப் போலவே உள்ளன. அவரை என்னால் மறக்க முடியாது. இங்கு எவ்வளவு கம்பீரமாக நடந்து வருவார்! அந்தக் காட்சி இன்னமும் என் கண்முன் நிற்கிறது. என் எஜமானர் எந்த நாட்டில் அலைந்து திரிகிறாரோ? அவர் எப்போது திரும்பி வருவார் என்றே எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறேன்'' என்று சொல்லிக் கண்ணீர் வடித்தான்.

ரூபதரனும் ''கவலைப்படாதே. உன் எஜமானன் விரைவிலேயே திரும்பி வந்து இங்குள்ள நிலையை மாற்றுவார்'' என்றான். சுகப்பிராப்தியும் ''விரைவில் அப்படி நடக்க வேண்டுமென்றே நான் கடவுளை வேண்டிக் கொள்கிறேன்'' என்றான். இதே சமயம் வேறொரு இடத்தில் கயவர்களான அரசகுமாரர்கள் கூடி தீரமதியைக் கொல்லத் திட்டமிட்டார்கள். அதன்பின் யாவரும் உணவு உண்ணச் சென்றார்கள்.

அவர்கள் அங்கிருந்த ஆடுகளையும் பன்றிகளையும் வெட்டிச் சமைக்கச் சொல்லி உண்டார்கள். மதுவைக் குடித்தார்கள். தீரமதி ரூபதரனுக்கு ஒரு ஆசனம் அளித்து அதன் முன் மேஜையைப் போடச் சொன்னான், அதன் மீது உணவுப் பொருள்களை அவன் வைத்து ''கிழவரே! நன்கு சாப்பிடுங்கள். உங்களை யாராவது எதாவது சொன்னால் நான் பார்த்துக் கொள்கிறேன். இது என் வீடு'' என்று சற்று உரக்கச் கூறினான்.

அதைக் கேட்டு அரசகுமாரர்கள் திடுக்கிட்டு ஆச்சரியப்பட்டனர். துர்





அவனது தலைக்குக் குறி வைத்து வீசினான்.

ரூபதரன் சட்டென விலகிக் கொள்ளவே அவை எங்கோ விழுந்தன. அது கண்டு தீரமதி கோபம் கொண்டு ''ஏய் அசுவா! உன் குறி என்ன குறி! அது மட்டும் அக்கிழவர் தலையில் பட்டிருந்தால் என் ஈட்டி உன் மார்பில் பாய்ந்திருக்கும். அவர் என் விருந்தாளி. அவரை அவமதிக்கக் கூடாது. மறுபடியும் இந்த மாதிரி நீ ஏதாவது செய்தால் உன்னைத் தொலைத்து விடுவேன். ஜாக்கிரதை'' என எச்சரித்தான்.

அதைக் கேட்டு சில நிமிடங்களுக்கு யாரும் எதுவும் கூறவில்லை. கடைசியில் ஒருவன் ''நண்பர்களே! இந்தப் பிச்சைக்காரன் விஷயத்தில் தலையிட வேண்டாம். தீரமதி! நாங்கள் விரும்புவது உன் தாயாரின் சுயம்வரம் நடக்க வேண்டும் என்பதே. அவள் எதற்காக இன்னமும் காத்துக் கொண்டிருக்கிறாள்? ஏன் எங்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கத் தயங்குகிறாள்?'' என்று கேட்டான்.

தீரமதியும் ''நீங்களெல்லாம் எதிர்பார்ப்பது விரைவில் நடக்கலாம். அதனால் அமைதியாய் பொறுமையுடன் இருங்கள். வீண் ஆர்ப்பாட்டம் செய்யாதீர்கள். அதனால் விபரீதங்களே விளையும். அதனால் நடக்கப் போவது என்ன என்று எதிர்பார்த்துக் கொண்டிருங்கள்'' என்றான்.

சற்று தூரத்தில் வாசலருகே உட்கார்ந்திருந்த பத்மமுகி எழுந்து போய்த் தன் கணவனது சாமான்களிருந்த அறையின் கதவைத் திறந்து அதிலிருந்த ரூபதரனின் வில்லையும் அம்புராத் தூணியையும் எடுத்தாள்.

புத்தியோ ''அந்தப் பயல் சொன்னதைக் கேட்டீர்களா? அவன் வீடாம்! என்ன திமிர்!! இவனைத் தீர்த்துக்கட்ட வேண்டும்'' எனத் தன் நண்பர்களிடம் கூறினான். தீரமதி அதைக் கேட்டும் அலட்சியமாக இருந்தான்.

அக்கயவர்களில் அசுவ நிபுணன் என்ற திமிர் பிடித்தவன் இருந்தான் அவன் நிறையப் பணம் படைத்தவன். தன் செல்வத்தைக் கண்டு பத்மமுகி மயங்கி தன்னையே மணந்து கொள்வாளென அவன் மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தான். அவன் அங்கிருந்த மற்றவர்களிடம் ''பார்த்தீர்களா! இந்தக் கிழப் பிச்சைக்காரன் நமக்கு சமமாக உட்கார்ந்து சாப்பிடுகிறான்! இவனை என்ன செய்கிறேன் பாருங்கள்'' என்று கூறி மாட்டுக் குளம்புகள் இரண்டை எடுத்து

பிறகு அவற்றை எடுத்துக் கொண்டு அவள் கூடத்திற்கு வந்தாள். அவள் கூடத்து வாசலில் நின்று ''எல்லோரும் கவனமாகக் கேளுங்கள். நீங்கள் என்னை மணக்கப் போவதாகக் கூறிக் கொண்டு இந்த வீட்டிற்கு வந்து இதன் பணத்தில் உண்டு குடித்து களித்து வருகிறீர்கள். என்னை மணக்க உங்களுக்கு என்ன தகுதி இருக்கிறது என்பதை உங்களில் ஒருவர் கூட நிரூபித்துக் காட்டவில்லை. உங்கள் திறமையைக் காட்டி என்னை மணக்கலாம். இவை என் கணவர் பயன்படுத்திய வில்லும் அம்புகளுமாகும் உங்களில் யார் இந்த வில்லில் நாண் ஏற்றி அம்பை நான் அடுக்கி வைக்கும் பனிரெண்டு கோடரித் தலைகளின் ஓட்டை வழியாக மறுபுறம் போய் விழும்படி எய்கிறாரோ அவரைநான் மணக்கிறேன்'' என்றாள்.

பிறகு அவள் பன்றி மேய்ப்பவனைக் கூப்பிட்டு கோடரித்தலைகளை அடுக்கி வைக்கச் சொன்னாள். அவற்றை அடுக்கும் போது அவன் கண்களில் கண்ணீர் நிறைந்தது. சுகப்பிராப்தியும் கண் கலங்கி நின்றான். துர்புத்தி அவர்களை ஏளனமாகப் பார்த்து ''அழுவதானால் எங்கேயாவது போய்த் தொலையுங்கள்'' என்று கூறினான்.

அவன் சொன்னது-தன்னைத் தவிர வேறு யாராலும் அவ்வாறு செய்ய முடியாது என்று சொல்வதற்கே. ஆனால் தீரமதியோ ''என் தாயாரை மணக்க வந்திருக்கும் உங்களில் யாராலும் வில்லில் நாண் ஏற்றி அம்பைக் கோடரித் தலைகளின் வழியே எய்து மறுபுறம் போய் விழச் செய்ய முடியாது. என் தகப்பனாரின் பலம் எனக்கு இருக்கிறதா என்று நான் முதலில் பார்க்கிறேன்'' என்று கூறி வில்லை எடுத்து அதில் நாண் ஏற்ற மூன்று முறை முயன்றான். நான்காவது முறையில் அவன் அம்முயற்சியில் வெற்றி பெறும் நிலையிலிருந்த போது ரூபதரன் வேண்டாம் என்று சைகை செய்ததைக் கண்டான்.

அதனால் தீரமதி ''அடேயப்பா! என்னால் முடியவில்லை. இங்கு பல பலசாலிகள் இருக்கிறார்களே. அவர்களில் யாராவது ஒருவர் இதைச்செய்து காட்டாமலா இருப்பார்?'' என்று கூறினான்.

(தொடரும்)



# அம்புலிமாமா செய்திகள்

## வடதுருவத்தில் இந்திய தேசியக் கொடி!

இந்திய விமானப் படையைச் சேர்ந்த ஸ்க்வாட்ரன் லீடர் சஞ்சய் தாபர் ஏப்ரல் 21ல் வட துருவத்தை அடைந்தார். இதை அவர் அடைந்த விதம் தம் விமானம் 10,000 அடிகளுக்கு மேல் சென்றபோது அதிலிருந்து பாய்ந்து தரையில் இறங்கியது. இப்படி இறங்க சரியான இடம் பார்க்க அவருக்கு இருமுறை ஆகாயத்தில் வட்டமிட வேண்டியதாயிற்று. அதன்பின் விநாடிக்கு 176 அடி வேகத்தில் அவர் குதித்துப்போய்க் கடைசி 300 அடிகளைப் பாராசூட்டால் கடந்து தரை இறங்கினார். இந்த கடைசிப் பயணம் ஆறு நிமிடங்களில் முடிந்தது. அவர் அங்கு முதல் வேலையாக இந்திய தேசியக் கொடியை நாட்டினார். அவர் அங்கு இறங்கிய போது வெப்ப நிலை மைனஸ் 26 செல்சியஸ். அங்கு மிகக் கடுங்குளிரில் தட்ப வெப்ப நிலை மைனஸ் 68 செல்சியஸ். இவ்வாறு விமானத்திலிருந்து பாய்ந்து தரை இறங்க இவர் நம் நாட்டில் பலமுறை முயன்று சாதனை புரிந்திருக்கிறார். ரஷ்யாவின் மையமொன்றின் இந்தத் துணிகர யாத்திரையில் இவர் கலந்து கொண்டார்.

## ஒற்றைக் காலால் சுற்றுப் பயணம்!

மத்தியப் பிரதேஷில் மாண்டூர் மாவட்டத்தைச் சேர்ந்த ராம்பிரகாஷ் பால்டே என்பவர் எட்டாம் வகுப்பு வரைதான் படித்திருக்கிறார். பிறந்த போதே ஒரு கால் சரியாக இல்லாததால் நடந்து போய்ப் படிக்க அவரால் முடியவில்லை. ஆனால் இப்போது ஒரே காலால் உதைத்து மோட்டார் சைக்கிளை கிளப்பி இந்தியா முழுவதும் இவர் சுற்றி வந்திருக்கிறார். ஜுலையில் மத்திய பிரதேஷிலிருந்து கிளம்பி 32 மாநிலங்களுக்குப் போய் விட்டு ஆகஸ்ட் 15ல் இவர் டில்லியை அடைந்தார். இரு சக்கர வண்டியில் உடல் ஊனமுற்ற தான் இந்தியா முழுவதும் சுற்றி வந்த செய்தி 'கின்னஸ் புக்'கில் இடம் பெற விரும்புகிறார். இவருக்கு அரிமா, ரோட்டரி சங்கங்கள் இந்தச் சுற்றுப் பயணத்திற்கு ஊக்கமளித்தன.

## எமலியின் கதை

அமெரிக்கக் கசாப்புக் கடைக்காரர் ஒருவர் எமிலி என்ற பசுவை வாங்கி பாதுகாப்பான மாட்டுக் கொட்டத்தில் அடைத்தார். ஆனால் அது சுற்றிலும் போடப்பட்டிருந்த ஐந்தடி உயர வேலியையும் தாண்டி ஓடிப் போய் விட்டது. எமிலியைத் தேடுவதில் தீவிரமாக முனைந்தனர். அந்தப் பசுவை போஸ்டனருகே உள்ள ராண்டா தம்பதிகள் கண்டு பிடித்தார்கள். அவர்கள் மாமிசம் சாப்பிடுபவர்களல்ல. முயல், ஆடு, நாய், குதிரை போன்ற பிராணிகளைத் தம் பண்ணையில் வளர்த்து வந்தார்கள். கசாப்புக்கடைக்காரர் அத்தம்பதிகள் பிராணிகளிடம் காட்டும் அன்பைக் கண்டு எமிலியை அவர்களுக்கு ஒரு டாலருக்கு விற்றார். இக்கதையை ராண்டா தம்பதிகள் யாவருக்கும் கூறி தாவர உணவின் சிறப்பு பற்றிப் பிரசாரம் செய்து வருகிறார்கள்.

## தண்ணீர் பயம்!

உலகில் இப்படியும் ஒரு அதிசயம் உள்ளது. ஜெர்மனியைச் சேர்ந்த எட்டு வயதுச் சிறுமியான ஹைடி சால்னிசர் தண்ணீர் குடிக்க வேண்டுமென்றாலும், நீரில் குளிக்க வேண்டுமென்றாலும் நடுநடுங்கி ஓடி ஒதுங்குகிறாளாம்.





# மந்திரக் குளிகை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நள்ளிரவில் இப்படிச் சிரமப்படுவதைப் பார்த்தால் நீ யாரையோ யோகி என்றும் சர்வசக்தி படைத்தவர் எனவும் கருதி அவரது சொற்படி நடப்பது போலத் தெரிகிறது. உலகில் சிலர்தாம் யோகிகள் என்று கூறிக் கொண்டு மந்திர மாயங்கள் செய்து காட்டுவதாகக் கூறி அப்பாவிகளை எமாற்றுவதும் உண்டு. உண்மையிலேயே சக்தி வாய்ந்தவர்கள் மிக மிகக் குறைவு. எனவே இவ்விஷயத்தில் நீ எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. இதை விளக்க உனக்கு ஒரு கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று

## வேதாளம் சொல்லும் கதை



கூறிக் கதையை ஆரம்பித்தது.

ஒரு ஊரில் குணசீலன் என்பவன் தன்வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்து கொண்டு புராணக்கதைகளைப் படித்துக்கொண்டிருந்தான். அப்போது ஒரு சாது வந்து ''ஐயா! ஏதாவது உணவு கொடுங்கள்'' என்று கேட்டார். குணசீலன் தலை நிமிர்ந்து அவரைப் பார்த்தான். பிறகு ''உங்களுக்கு உணவு கொடுப்பதால் எனக்கு என்ன லாபம்?'' என்று கேட்டான்.

அந்த சாதுவும் ''நான் முற்றும் துறந்த சன்னியாசி. எனக்கு உணவு கொடுத்தால் உனக்குப் புண்ணியம் கிடைக்கும். அந்தப் புண்ணியத்தால் வாழ்நாள் முழுவதும் நீ சுகமாக வாழ்வாய். இறந்தபின் நீ மோட்சத்தை அடைவாய்'' என்றார். அதைக் கேட்ட குணசீலன் ''புண்ணியம் சம்பாதிக்கப் புராணங்களைப் படித்தாலோ, கடவுளை வழி பட்டாலோ போதுமே. அதற்கு ஒரு காசு கூடச் செலவு செய்ய வேண்டியதில்லையே. உங்களைப் போன்றவர்களுக்கு உணவு அளித்தால் செலவுதான். அதனால் நான் விரும்புவதை அளிப்பதானால் உங்களுக்கு உணவளிக்கிறேன்'' என்றான்.

சாதுவும் அவன் விரும்புவது என்ன என்று கேட்கவே குணசீலனும் ''என் எதிர்வீட்டில் ஞானசேகரன் என்ற பண்டிதர் இருக்கிறார். அவர் எந்த விதக் கஷ்டமும் இல்லாமல் இருக்கிறார். அவருக்குக் கஷ்டம் ஏற்படவும் நான் சுகமாக இருக்கவும் தாங்கள் வரம் கொடுக்க வேண்டும். இதுவே நான் விரும்புவது'' என்றான். சாதுவோ ''உனக்கு நான் ஒரு வரம் தான் கொடுக்க முடியும். நீ சுகமாக இருக்க வரம் கொடுக்க முடியும். ஆனால் நீ கேட்கும் இரண்டாவது வரத்தைக் கொடுக்க முடியாது. எந்த நிலையிலும் பிறருக்குத் கெடுதல் செய்ய எண்ணாதே. அது தவறு'' என்றார்.

அதைக் கேட்ட குணசீலன் ''அப்படியானால் உங்களுக்கு நான் உணவு கொடுக்க மாட்டேன். நீங்கள் போகலாம்'' என்றான். குணசீலனின் மனைவி சாதுவும் தன் கணவனும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டுதான் இருந்தாள். சாது அங்கிருந்து சென்றதும் அவள் தன் கணவனிடம் ''ஐயோ! அவர் வரம் கொடுப்பதாகக் கூறியும் அவரைப் போகவிட்டீர்களே. இப்போது அவர் நம் எதிர் வீட்டுக்காரருக்கு ஒரு வரத்தைக் கொடுத்து விட்டுப் போகப்

போகிறார். உங்களால் நமக்கு நஷ்டம். எதிர்வீட்டுக்காரனுக்கு லாபம்'' என்று கூறினாள்.

குணசீலன் சிரித்துக் கொண்டே ''அட பைத்தியமே! இவனெல்லாம் சக்தி வாய்ந்த சாதுவா? சோற்றுக்காக அலையும் சோம்பேறிகள் கூட்டத்தைச் சேர்ந்தவன். உண்மையான சாது இப்படியெல்லாம் சாப்பாட்டிற்காக அலைய மாட்டான். இவன் கபட சன்னியாசி'' என்றான். அதற்கு அவன் மனைவி ''அப்படியானால் அவரை ஏன் அவ்வளவு நேரம் நிற்க வைத்துப் பேசிக் கொண்டிருந்தீர்கள்? உடனேயே விரட்டி இருக்க வேண்டியது தானே'' என்று கேட்டாள்.

குணசீலனும் ''அவன் மனதில் சாப்பாடு கிடைக்கும் என்ற ஆசையைக் கிளப்பி விட்டுச் சற்று வேடிக்கை பார்த்தேன். அவ்வளவுதான்'' என்றான். அவளும் ''அவர் நீங்கள் கேட்ட வரங்களைக் கொடுத்திருந்தால் என்ன செய்திருப்பீர்கள்'' என்று கேட்கவே அவனும் ''சில சாதுக்கள் பிறருக்குக் கெடுதலையும் செய்யக்கூடியவர்கள். அப்படிப்பட்ட சக்தி இவனிடம் இருக்குமோ என்று பார்த்தேன். அது இல்லை'' என்றான்.

சாது மெதுவாக நடந்தவாறே அவர்கள் இருவரும் பேசியதைக் கேட்டவாறே எதிர் வீட்டிற்குச் சென்றார். அவர் குரல் கொடுத்ததுமே ஞானசேகரன் வெளியே வந்து சாதுவைப் பார்த்து ''ஆகா! இன்று எனக்கு நல்ல நாள். தங்களைக் காண என்ன புண்ணியம் செய்தேனோ! இன்று பெரிய கொடை வள்ளல் என்று பெயர்பெற்றிருந்த என் பாட்டனாரின்



நினைவுநாள். அவர் தம் பொருளை எல்லாம் தானமாகக் கொடுத்தவர். இந்த நாளில் நீங்கள் எங்கள் வீட்டிற்கு வந்தது சிறப்பானதே. என் வீட்டில் உணவருந்த வேண்டும்'' என்று கூறி வீட்டிற்குள் அழைத்துச் சென்றார். அவரது குடும்பமே சாதுவை வரவேற்று உபசரிப்புகளைச் செய்தது.

சாதுவும் தமக்கு அளிக்கப்பட்ட உணவை உண்டு ஞானசேகரரிடம் ''விருந்தளித்து உபசரிப்பதில் உன் குடும்பத்தவருக்கு இணையாக நான் எங்குமே பார்த்ததில்லை. இது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. உனக்கு என்ன வேண்டுமோ கேள். நான் அளிக்கிறேன்'' என்றார். ஞானசேகரரும் அவரைப் பணிவுடன் வணங்கி ''ஐயனே! என் சந்தோஷத்திற்கும் மனத்திருப்திக்கும் தங்களுக்கு



உணவளித்தேன். இதற்கு பதிலாக நான் தங்களிடமிருந்து எதையும் எதிர் பார்க்கவில்லை. தங்களுக்கு சந்தோஷ மும் திருப்தியும் ஏற்பட்டால் அதுவே போதும், எனக்கு வேறெதுவும் வேண்டாம்'' என்றார்.

அதைக் கேட்ட சாது மகிழ்ந்து ''நான் உன் விருந்தாளி. விருந்தாளி கடவுளுக்கு சமம். கடவுள் வரம் அளிப்பதாகக் கூறினால் அது வேண் டாம் எனக் கூறி ஏற்க மறுப்பது சரி யல்ல. அது அவரை அவமதிப்பது போலாகும்'' என்றார். அப்போது ஞானசேகரர் தம் குடும்பத்தவருடன் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்தார். அவர் சாதுவிடம் ''ஐயா! ஒரு வருடத் திற்கு முன் என் தந்தை காலமானார். அப்போதிலிருந்து என் தாய் மனக் கவலையால் படுத்த படுக்கையாய் நோயுற்றுக் கிடக்கிறாள். எவ் வளவோ வைத்தியம் பார்த்தும் அவள் குணமடையவில்லை. நாளுக்கு நாள் அவளது உடல் நிலை மோசமாகிக் கொண்டே வருகிறது. இதைக் கண்டு நாங்கள் யாவரும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். அவளது நோய் போய் எங்களுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கும்படிச் செய்ய வேண்டு கிறேன்'' என்றார்.

இதைக் கேட்டு சாது சற்று யோசித்துவிட்டு ''நீ மிகவும் நல்ல வன். இந்த உன் நல்ல குணமே உனக்கு எதிரியோ என நான் சந்தேகிக்கிறேன். இப்படிப்பட்ட நற்குணத்தை நீ விட்டு விட்டால் உன் தாயின் நோய் மறை யலாம். நீ உன் தாய்க்காக எதையும் செய்யத் தயாரா?'' என்று கேட்டார். ஞானசேகரும் ''ஐயா! நீங்கள் சொல் வது எனக்கு விளங்கவில்லையே'' என்றார்.

அப்போது சாது அவரது எதிர் வீட்டிலுள்ள குணசீலனைப் பற்றிக் கூறி ''என்னிடம் ஒரு குளிகை இருக் கிறது. அதை வாயில் போட்டுக கொண்டு ஒருவன் தனக்கு நல்லது நடக்கவும் இன்னொரு இவனுக்குக் கெடுதல் ஏற்படவும் நினைத்தால் அந்த இரண்டும் நடக்கும். ஆனால் அந்த இரண்டில் ஒன்றை மட்டும் நினைத்தால் எதுவும் நடக்காது. ஆனால் அதை வாயில் போட்டுக் கொண்டவனுக்குக் கெடுதல் ஏற்படும் நான் அந்த குளிகையை உனக்குக் கொடுக்கிறேன். அதை உன் வாயில் போட்டுக்கொண்டு உன் தாயார் குண மடைய வேண்டுமென எண்ணிக் கொள். அடுத்து உன் எதிர்வீட்டுக்கார

னான குணசீலனுக்குத் கெடுதல் ஏற்பட வேண்டும் என மனதில் நினை. ஏனெனில் அவன் உனக்குக் கெடுதல் செய்ய நினைத்தவன். எனவே நீ அவனுக்குக் கெடுதலை நினைப்பது தவறல்ல'' என்றார்.

அதைக் கேட்ட ஞானசேகரர் ஆச்சரியப்பட்டு ''ஐயா! இந்த குளிகையை நீங்கள் குணசீலனுக்கு ஏன் கொடுக்காமல் எனக்குக் கொடுக்கிறீர்கள்? இதை அவனுக்குக் கொடுத்திருந்தால் மிகவும் மகிழ்ச்சி அடைந்திருப்பான். அவன் தனக்கு நன்மையையும் எனக்குக் கெடுதலையும் நினைத்திருப்பானே. பிறருக்குக் கெடுதலை நினைத்தால் என் மனம் சந்தோஷப்படாது. என் தாயார் குணமடையாவிட்டாலும் பரவாயில்லை எனக்கு இந்த குளிகை வேண்டாம்'' என்றார்.

சாதுவோ ''குணசீலன் இந்த குளிகையைப் பெறத் தகுதியற்றவன். அதனால்தான் அவனுக்கு இதை நான் கொடுக்கவில்லை. நீதான் இதனை ஏற்கத்தக்கவன். இதனை நீ ஏற்க மறுத்தால் நீ என்னை அவமதித்தது போலாகும். இதனால் உனக்கு நன்மையும் குணசீலன் போன்ற கெட்டவன் உன் வீட்டெதிரே இல்லாமல் போகவும் உனக்கு ஒரு வாய்ப்பு கிடைக்கிறது'' எனக் கூறி ஒரு குளிகையை எடுத்து அவர் கையில் வைத்து விட்டுச் சென்றார்.

ஞானசேகரர் குளிகையை உடனே வாயில் போட்டுக் கொண்டு ''என் தாயாரின் நோய் மறைந்து விட வேண்டும். என் வீடு ஒரு பெரிய மாளிகையாக மாற வேண்டும்'' என சற்று உரக்கக்கூறினார். அதைக் கேட்ட



அவரது குடும்பத்தவர் ''சாது கூறியபடி நமக்கு ஒரு நல்லதையும் எதிர் வீட்டுக்காரனுக்குக் கெடுதலையும் நினைக்கா விட்டால் இரண்டுமே நடக்காமல் போவதோடு நமக்கே கெடுதல் அல்லவா ஏற்படும்'' என்று கவலைப்பட்டுக் கூறினார்கள்.

அப்போது ஞானசேகரரின் தாயார் படுக்கையிலிருந்து எழுந்து நடந்து வந்தாள். அவளது உடல் சுருக்கம் போய் நன்கு பலமுள்ளவளாக விளங்கினாள். இதைக் கண்டு எல்லோரும் திகைப்பும் ஆச்சரியமும் அடைந்தார்கள். ஞானசேகரரும் ''அம்மா! நீ முன் போல எழுந்து நடமாடிப் பேசுவது எனக்கு மிக்க மகிழ்ச்சியையே அளிக்கிறது'' என்றார்.

அப்போது எல்லோரும் ''நம் வீடே ஒரு மாளிகை போல மாறி விட்

டதே'' என்று கூறி ஆச்சரியப்பட்டார் கள். ஞானசேகரர் தம் வீட்டிலிருந்து வெளியே வந்தார். அப்போது அவர் எதிர்வீட்டு குணசீலன் புதிதாக மாறிய வீட்டைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டு ஏங்குவதைக் கண் டார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! சாது சக்தி வாய்ந்தவர் என்பதில் சந்தேகமே இல்லை. அவர் தன் சக்தி மீது முழு நம்பிக்கை கொண்டுதானே குளிகையைக் கொடுத்தார்! அவர் கூறியபடி ஒருவர் அதனைத் தன் வாயில் போட்டுக் கொண்டு தனக்கு நல்லதையும் மற்றொருவனுக்கும் கெடுதலையும் நினைத்தால்தான் இரண்டும் நடக் கும். அப்படி நினைக்கா விட்டால் இரண்டுமே நடக்காமல் குளிகையை விழுங்கியவனுக்குக் கெடுதலே விளையுமன்றோ? ஆனால் ஞான சேகரர் அக்குளிகையைத் தன் வாயில் போட்டுக் கொண்டு தனக்கு இரண் டும் நன்மைகள் பயப்பனவற்றைத் தானே நினைத்தார். அவை இரண் டுமே நடந்தன. இது எப்படி? இந்த சந் தேகத்திற்குச் சரியான விடை தெரிந் திருந்தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச்சுக்குநூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சாதுவும் சரி, ஞான சேகரரும் சரி, இருவரும் நல்லவர் களே. குணசீலன் உணவு கொடுக்கா மல் விரட்டியதால் கோபப்பட்டு சாது அவனைச் சபித்து விடவில்லை, ஞானசேகரரின் நற்குணத்தைக் கண்டு அதனை மேலும் சோதிக்கவே தன் குளிகையைப் பற்றிக் கூறினார். அவர் தன்னைப் பரீட்சிக்கிறார் என்று புரிந்து கொண்ட ஞானசேகரர். தனக்கு நன்மை பயக்கும் இரு விருப்பங் களை உரக்கக் கூறினார். இதனால் நல் நடத்தையால் யாரும் கெடுதலை அடைய மாட்டார்கள் என் பது நிரூ பிக்கப்பட்டது. பிறருக்குக் கெடுதல் நினைக்காதவனுக்கு எவ்வித பயமோ கெடுதலோ அல்லது ஆபத்தோ வராது. இதற்கு ஞானசேகரர் ஒரு எடுத் துக்காட்டு'' எனப் பதிலளித்தான்.

விக்கிரமனின் இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# அவை கூடப் பாவமே!

தானே அதிமேதாவி என்று நினைத்து வரும் ஆண்டாளு அம்மாள் தன் மருமகளைத் திட்டாமல் அவளது ஒவ்வொரு செயலுக்கும் முட்டுக் கட்டை போட்டுத் தடுத்து வந்தாள். அவள் மருமகள் சீதா நல்ல புடவையை எடுத்துக் கட்டிக் கொள்ளப் போனால் ஆண்டாளு ''நீயே அழகாய் இருக்கிறாய் இது வேறு எதற்கு?'' என்று கூறித் தடுத்து விடுவாள். ஏதாவது பண்டிகையின் போது பாயசம், வடை, போளி என்று செய்ய சீதா நினைத்தால் ஆண்டாளு ''அதெல்லாம் வேண்டாம் வயிற்றைக் கெடுத்துவிடும். வைத்தியருக்கு வேறு தண்டம் அழ வேண்டும்'' என்று கூறித் தடை போட்டு விடுவாள்.

ஏதாவது சீதா வேண்டுதல் என்று கோவிலுக்குப் போக நினைத்தால் ஆண்டாளு ''கோவிலுக்குப் போனால்தான் பக்தியா?' வீட்டில் இருந்தவாறே புராணங்களைப் படித்தால் போதும். வேண்டுதல் என்று எதுவும் செய்ய வேண்டாம். அதற்காக ஆகும் செலவைத் தவிர்க்கலாம். மனதிற்குள் பகவானை நினைத்துக் கொள்வதால் ஒரு பைசாக் கூட செலவு ஆகாது'' என்று கூறி விடுவாள். சீதாவுக்குத் தன் மாமியாரின் நோக்கம் புரிந்து விட்டது. ஆண்டாளு கூறுவதற்கு எதிர்த்துப் பேசினால் வீண் சண்டைதான் வரும். அதனால் அவள் பண்டிகை, விரதம், நோன்பு என்றெல்லாம் அனுசரிக்காமல் மன தில் பக்தி சிரத்தையுடன் பகவானை தியானித்து வரலானாள்.

இப்படியாகப் பல வருடங்கள் உருண்டோடின. வயதாகி ஆண்டாளுவும் ஒருநாள் இறந்து போனாள். எமதூதர்கள் அவளை மேலுலகிற்கு அழைத்துச் சென்றார்கள். வழியில் அவர்கள் அவளை சொர்க்கலோகத்தில் ஒரு நிமிடம் நிறுத்தினார்கள். தனக்கு சொர்க்க வாசம்தான் கிடைக்

—ரேணுகா தேவி—

கப் போகிறது என்று எண்ணி அவள் மகிழ்ந்து கொண்டிருந்த போது எம தூதர்கள் அவளை அழைத்து போய் எமதர்மனின் முன் நிறுத்தினார்கள்.

எமனும் ''இவளை நரகலோகத்தில் கொண்டு போய் நூறு ஆண்டுகள் அங்கு இருக்கச் செய்யுங்கள்'' என்று கட்டளை இட்டான். அதைக் கேட்ட ஆண்டாளு ''இதென்ன அநியாயம்! வரும் போது இவர்கள் சொர்க்கலோகத்தில் ஒரு நிமிட நேரம் நிறுத்தினார்கள். என்னை அங்கேயே இருக்க விடுவார்கள் என நினைத்தேன். ஆனால் என்னை இங்கே இழுத்து வந்து நரக லோக வாசத்தை வாங்கிக் கொடுக்கிறார்களே. நான் புண்ணியமே செய்யவில்லையா? அப்படி நான் என்ன பாவங்களைச் செய்தேன்?'' என்று கேட்டாள்.

எமதர்மனும் ''நீ பாவங்கள் தான் செய்திருக்கிறாய். உன் மருமகள் ஒரு நல்ல புடவை கட்டிக் கொள்ள நீ அனுமதிக்கவில்லை. நல்ல சாப்பாடு சாப்பிட விடவில்லை. பண்டிகை கொண்டாடக் கூடாது என்று தடுத்தாய். நோன்பு, விரதம் என இருந்து பலகாரம் செய்யக்கூடாது என்றாய். வேண்டுதல் செய்யக் கூடாது என்றும் கோவிலுக்குப் போகக்கூடாது என்றும் தடுத்தாய். இப்படியாக நீ உன் மருமகளை மனம் நோக வைத்ததெல்லாம் பாவச் செயல்களே. இவற்றில் ஒன்றையாவது தினமும் செய்து வந்திருக்கிறாய். அதனால்தான் உனக்கு நரகலோக வாசம் கிடைக்கிறது. ஆனால் நீ ஒரே ஒரு புண்ணிய காரியம் செய்திருக்கிறாய். நீ உன் மருமகளை வீட்டிலிருந்தபடியே புராணங்களைப் படித்து கடவுளிடம் பக்தி செலுத்த ஒருநாள் சொன்னாய். இதனால் அவள் நீ கூறியபடியே தினமும் செய்து வந்ததால் கடவுளின் பரம பக்தையாகி விட்டாள். நீ அவளைக் கடவுள் பக்தையாக இருக்கச் சொன்ன ஒரே புண்ணியத்தால்தான் ஒரு நிமிட நேரம் நீ சொர்க்கத்தில் இருக்கும் அதிர்ஷ்டத்தைப் பெற்றாய். இனி நீ நரகத்திற்குப் போ. உன் போன்ற அகம்பாவம் பிடித்த மூடர்களுக்கு இதுதான் தண்டனை'' என்றான்.

எமதூதர்கள் ஆண்டாளுவை நரக லோகத்திற்குக் கொண்டு செல்லவே அவள் தலை குனிந்து கொண்டு நடந்தாள்.



# திருவனந்தபுரம் போகிறோம்

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




பெரியாறும் மற்றும் சில நதிகளும் அரபிக் கடலில் சேரும் போது சகதி போன்ற எண்ணெய்ப் பசையுள்ள மண்ணை அடித்துக் கொண்டு வருவதால் அந்த மண் கடற்கரை ஓரம் தங்கி விடுகிறது. பின்னர் பருவு மழை பெய்யும் போது இந்த மண் சுற்றிலும் பரவுகிறது. இந்த மண் திட்டுகள் ஆற்று நீரைத் தேக்கி விடுகின்றன. அராபிய வியாபாரிகள் தங்கள் கப்பல்களை நங்கூரம் பாய்ச்சி நிறுத்த இந்தத் திட்டுகளை முன்காலத்தில் பயன்படுத்தினார்கள்.

ஆலப்புழாவிலிருந்து கொல்லம் 25கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வழியில் அழகிய காயல்களைக் காணலாம். இவற்றில் அல்லியும் தாமரையும் நிறையக் காணக் கிடைக்கும். இவ்வழியிலுள்ள அம்பலப்புழா கிருஷ்ணர் கோவில் அங்கு பிரசாதமாக வழங்கப்படும் பாயசத்திற்குப் பெயர் பெற்றது.



ஒட்டம் துள்ளல்

இங்கு தான் ஓட்டம் துள்ளல் என்ற கலை தோன்றியது. குஞ்சன் நம்பியார் என்ற கவிஞர் முழவு என்ற பானை போன்ற வாத்தியத்தை அடித்து புராணக் கதைகளை சாக்கியர் கூத்து என நடத்தி வந்தார். இக்கூத்து சாக்கியர் இனத்தவரால் அன்றாடப் பிரச்னைகளைச் சிரிப்பு மூட்டும் விதத்தில் கூற அமைந்தது. ஒருமுறை இக்கூத்து நடக்கும் போது கவிஞர் தூங்கி விடவே கூத்தில் நடக்கும் சாக்கியர் அவரைக் கோபித்துக் கொண்டாராம். இதனால் ஆத்திரப்பட்டு அக்கூத்து முறையில் நடன பாணியுடன் ஓட்டம் துள்ளல் என்பதை ஆரம்பித்தாராம்.



அம்பலப்புழா கிருஷ்ணர் ▲ கோவில் மண்டபத்தில் முதன் முதலில் ஓட்டம் துள்ளல் நடைபெற்ற இடம்.

சாக்கியர் கூத்தில் குஞ்சன் நம்பியார் பயன்படுத்திய முழவு வாத்தியம் ▶

இந்த ஆண்டு ஜுன் மாதத்தில் நம்பியார் பயன்படுத்திய முழவை அவர் முதலில் ஓட்டம் துள்ளல் நடத்திய இடமாகிய கோவிலுள் வைத்தார்கள்.

அம்பலப்புழாவிற்குத் தெற்கே காயங்குளம் உள்ளது. இது காயங்குளம் கொச்சுண்ணி என்ற கொள்ளைக்காரன் பிறந்த இடம். இவன் ஆங்கில ராபின் ஹுட்டைப் போலப் பணக்காரர்களைக் கொள்ளை அடித்து ஏழைகளுக்கு உதவி வந்தான். 18வது நூற்றாண்டில் வாழ்ந்த இவனை அடைத்த சிறையில் இவன் உபயோகித்த ஆயுதங்கள் வைக்கப் பட்டுள்ளன.

கொல்லம் அஷ்டமுடி ஏரிக்கரையில் அமைந்த வரலாற்றுப் புகழ் பெற்ற நகரம். இது பழங்காலத் துறைமுகம். மிளகு இதன் முக்கிய வணிகப் பொருள். 13வது நூற்றாண்டில் சீன வணிகர்கள் இதனைத் தம் வணிக மையமாகக் கொண்டிருந்தார்கள். கொல்லத்து மன்னர் தம் தூதரைச் சீன அரசாங்கத்திடம் வைத்திருக்க, சீன அரசின் தூதரும் அக்காலத்தில் கொல்லத்தில் இருந்தாராம்.

கேரளாவின் ஒரே குடிநீர் ஏரி கொல்லத்தின் சாஸ்தம் கோட்டை ஏரி. இதன் கரையிலுள்ள சாஸ்தா கோவிலை ராமபிரான் அமைத்ததாகக் கருதப்படுகிறது. ஆழப்புழாவில் வெள்ளை நிறக் கடற்கரை போலல்லாமல் கொல்லம் கடற்கரை கருப்பாக உள்ளது. இதற்குக் காரணம் இங்குள்ள இல்மனைட். பாக்ஸைட்டும்தான்.



அயல் நாட்டினரைத் கவர்ந்த மிளகு

இதற்குத் தெற்கே 20 கி.மீ. தொலைவிலுள்ள அஞ்சங்கோவில்தான். இப்பகுதியின் கிழக்கிந்தியக் கம்பெனி தன் முதல் பண்டகசாலையைத் திறந்தது. இங்கு குடியேறிய ஆங்கிலேயர் கட்டிய கோட்டை இன்றும் உள்ளது. இதற்கு அருகில் உல்லாசப் பயணிகள் வந்துகுமிழும் வர்க்கலா உள்ளது. இங்கு கடற்கரையை ஒட்டிய செங்குத்தான பாறைகளில் தாதுகலந்த நீர் ஊற்றுகள் பீச்சி அடிக்கின்றன.


ஸ்ரீ நாராயண குரு

வர்க்கலாவின் சிவகிரிக் குன்றில்தான் பிரபல சீர்த்திருத்தவாதி நாராயண குரு இறந்தார். நாராயண குரு 'ஒன்றே மாதம், ஒன்றே இனம், ஒருவரே கடவுள்' எனப் போதித்தார். ஜாதி மத வேறுபாடின்றி மக்கள் முன்னேற்றம் காண வேண்டும் என இவர் அறிவுறுத்தி வந்தார். இங்குள்ள ஜனார்த்தனர் கோவில்கிருஷ்ணரை வர்க்கலப்பன் எனக் கூறி ஹிந்துகள் திரண்டு வந்து வழிபடுகிறார்கள்.

வர்க்கலாவிற்கு 48 கி.மீ. தெற்கே திருவனந்தபுரம் உள்ளது. இது கேரள மாநிலத்தின் தலைநகர். இங்குள்ள கோவிலில் அனந்தபத்ம நாபர் அனந்தன் என்ற ஆயிரம் தலைப்பாம்பின் மீது சயனித்துள்ளார். இது குன்றுகளிடையே அமைந்த நகரம். கடலுக்கு மிக அருகில் உள்ளது.

மார்த்தாண்ட மகாராஜா திருவனந்தபுரத்தைத் தம் தலைநகராக்கி அதனை

அஞ்சதங்கோ கோட்டை





**திருவனந்தபுர அனந்த பத்மநாபர் ஆலயம்**

விஷ்ணுபகவானுக்கு அர்ப்பணம் செய்தார். திருவனந்தபுர அரசகுமாரர்கள் தம்மை அனந்தபத்ம நாபதாசன் எனக் கூறிக் கொள்வதில் பெருமைப்பட்டனர். தற்போதைய கோவில் 18ம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. இது ஆறு மாத காலத்தில் 4000 கொத்தர் களையும் 6000 பணியாளர்களையும் 100 யானைகளின் உதவியும் கொண்டு கட்டப்பட்டது. இந்த அனந்த பத்மநாபர் கோவிலில் பாவைகளின் உருவச் சிலைகளுள்ள மண்டபம் உள்ளது. இச்சிலைகளின் கைகளிலுள்ள விளக்குகள் மாலை வேளைகளில் ஏற்றப்பட்டு மண்டபத்தைப் பொலிவுறச் செய்கிறது. இக்கோவில் தலைவாசல் கோபுரம் ஏழு அடுக்குகள் கொண்டது.

திருவனந்தபுரத்து விலங்கினக் காட்சியகம் நாட்டின் மிகப் பெரியனவற்றில் இரண்டாவது இடத்தை வகிக்கிறது. ஸ்ரீ சித்திரக் கலைக் கூடத்தில் ரஜபுத்திர, முகலாய உருவங்கள் வைக்கப்பட்டுள்ளன. இங்கு புகழ் பெற்ற ஓவியர் ராஜாரவிவர்மரின் ஓவியங்களின் தனிப்பகுதி உள்ளது. திபேத்திய, சீன, ஜப்பானிய, பாலிக் கலை வண்ணப் பொருள்களையும் இங்கு காணலாம்.

இங்குள்ள விக்கிரம் சாராபாய் விண்வெளி ஆராய்ச்சி மையம் 1972ல் நிறுவப்பட்டது. இது விண்வெளிக் கலங்களை அளிக்கிறது. திருவனந்தபுரத்திற்கு 12 கி.மீ தெற்கே கோவலம் உள்ளது. இங்குள்ள வளைந்த கடற்கரை பார்க்க அழகானது. இது 'ராமகதாப் பாட்டு' எழுதிய கவிஞர் அய்யப்பிள்ள ஆசானின் பிறப்பிடமாகும். பூவார் என்னும் இடம் தமிழ்நாடு கேரள எல்லைகளுக்கு இடையே உள்ளது. இங்கு 970 மீட்டர் உயர அகஸ்திய கூடத்திலிருந்து நெய்யாறு கிளம்பி அரபிக் கடலில் விழுகிறது.



# ஹேமாங்கனியின் தந்திரம்

தர்மபுர மன்னன் தர்மாங்கதன் நீதி நெறிதவறாதவன். கொடையாளி. வாக்குதவறாதவன். தர்ம நியாயமாய் நடந்து வந்ததால் மக்கள் அவனைப் பெரிதும் விரும்பினார்கள்.

தர்மபுரத்தின் அண்டை நாடு சிங்க புரம். அதன் மன்னன் சிங்கராயன். தர்மபுரத்திற்கும் சிங்கபுரத்திற்கும் நீண்ட காலமாகவே பகைமை இருந்து வந்தது. சிங்கராயன் தர்மபுரத்தை எப்படியாவது கைப்பற்றி விட வேண்டு மென்ற நினைப்பிலேயே இருந்தான். ஆனால் தர்மபுரத்தின் படை பலத்தை எண்ணிப் பயந்து கொண்டிருந்தான்.

தர்மாங்கதனோ சிங்கபுரியுடன் சமாதானம் செய்து கொண்டு நட்புறவு கொள்ள விரும்புவதாக சிங்கராயனுக்கும் செய்தி அனுப்பினான். ஆனால் சிங்கராயன் சமாதானம் செய்து கொள்ள இசையவில்லை. அது மட்டுமல்லாமல் தன் படைபலத்தைப் பெருக்கி தர்மபுரத்தின் மீது படை எடுத்து வந்தான்.

இரு நாடுகளுக்குமிடையே போர் ஆரம்பமாகியது. முதல் நாள் போரில் வெற்றி தோல்வி என யாருக்கும் ஏற்படாமல் மாலையானதும் போர் நின்றது. மறுநாள் போரில் தர்மாங்கதன் படுகாய முற்றுத் தன் கூடாரத்திற்கு வந்தான். அவனுக்குத் தக்க சிகிச்சை அளிக்கப்பட்டது. ஆயினும் அவன் போர்க்களத்திற்கும் போய் போர் புரியும் நிலையில் இருக்கவில்லை.

அதனால் தர்மாங்கதன் மிகவும் கவலை கொண்டு ''நான் போரில் படுகாயப்பட்டுப் போர்க் களத்திற்குப் போக முடியாமல் இருக்கிறேன். நான் தலைமை ஏற்றுப் படையை நடத்தா விட்டால் என் வீரர்கள் பயந்து பின் வாங்குவார்களோ? நான் தோற்றுப் போய் நாடு சிங்கராயனின் கையில் அகப்பட்டால் என்ன ஆகுமோ?'' என எண்ணலானான். அப்போது சேனாதி

—சங்கர சுவாமிநாதன்—



பதி ''அரசே! கவலைப் படாதீர்கள். நான் தலைமை தாங்கி போர்க்களத்தில் படையை நடத்தி சென்று சிங்கராயனைத் தோற்கடித்து நம் நாட்டைக் காப்பாற்றுகிறேன்'' என்று கூறினான். சேனாதிபதி நாட்டுப் பற்று கொண்டவனே. நல்ல வீரனுமாவான். ஆயினும் தர்மாங்கதனின் மனம் நிம்மதி அடையவில்லை.

சேனாதிபதி மன்னனின் கூடாரத்திலிருந்து போன சற்று நேரத்திற்கெல்லாம் தர்மாங்கத மன்னனைக் காண அவனது படை வீரன் ஒருவன் வந்தான். அவன் மன்னனை வணங்கி ''அரசே! என் பெயர் அமரசிம்மன். நான் தங்களது படையில் அண்மையில் சேர்ந்த ஒரு போர் வீரன். நீங்கள் படுகாய முற்றுக் கிடப்பது அறிந்தேன். இந்நிலையில் சிங்கராயன் முன் நீங்கள் நின்று அவனோடு போர்புரிய முடியாது. நான் அவனைத் தனியாக எதிர்த்துச் சண்டையிட்டுக் கொன்று வருகிறேன். எனக்கு இந்த வாய்ப்பினை அளியுங்கள்'' என்று வேண்டினான்.

ஒரு சாதாரணப் படைவீரன் சிங்கராயனைத் தனியாக எதிர்த்துப் போரிட்டுக் கொல்வதாகக் கூறியது கேட்டு தர்மாங்கதன் ஆச்சரியப்பட்டான். அவன் அவ்வீரனைப் பார்த்து ''இளைஞனே! நீ உற்சாக மிகுதியால் இவ்வாறு கூறுகிறாய். சிங்கராயன் பெரிய படையோடு வந்திருக்கிறான். அவனை உன்னால் எதிர்த்துத் தோற்கடித்து விட முடியுமா? உனக்குப் போர் அனுபவம் இருக்கிறதா?'' என்று கேட்டான். அதைக் கேட்ட அமரசிம்மன் ''அரசே! என் பாட்டி சொன்ன வீரர்களின் கதைகளைக் கேட்டு நான் ஒரு தீர்மானத்திற்கு வந்தேன். அதனால் போர்க்கலையில் நன்கு பயிற்சி பெற்றேன். என் தீர்மானம் நான் விரும்பிய ஒன்றை அடைவதுதான். அதனால்தான் இந்த வாய்ப்பை எனக்கு அளிக்க வேண்டுகிறேன்'' என்றான்.

தர்மாங்கதனும் ''உன் விருப்பம் என்ன?'' என்று கேட்கவே அமரசிம்மனும் ''அதைச் சிங்கராயனைக் கொன்று விட்டு வந்து கூறுகிறேன். இப்போது நீங்கள் எனக்கு என் விருப்பத்தை நிறைவேற்றுவதாக வாக்குறுதி அளித்தால் மட்டும் போதும்'' என்றான். மன்னனும் சற்று நேரம் யோசித்து விட்டு ''அமரசிம்மா! நீ மட்டும் போர்க்களத்தில் சிங்கராயனைக் கொன்று விட்டுத் திரும்பி

வந்தால் உன் விருப்பத்தை நிறை வேற்றுவதாக வாக்களிக்கிறேன்'' என்றான். இதன் பிறகு மன்னன் சேனாதிபதியை அழைத்து ''இந்த இளைஞன் அமரசிம்மன் நம் படையிலுள்ள வீரனே. இவன் போர்க்களத்தில் சிங்கராயனை எதிர்த்துத் தோற்கடிப்பதாகக் கூறுகிறான். நாளை இவன் தலைமையில் போர் நடக்கட்டும். முடிவு என்ன என்றுதான் பார்ப்போமே'' என்றான். சேனாதிபதியும் அந்த ஏற்பாட்டிற்கு இணங்கினான்.

மூன்றாவது நாள் போரில் அமரசிம்மன் எதிரிப் படை வீரர்களை அடித்து வீழ்த்தி சிங்கராயன் அமர்ந்திருந்த ரதத்தை அணுகினான். அவன் அதன் தேரோட்டியைத் தாக்கி வீழ்த்திவிட்டு சிங்கராயனோடு வாட் போர் புரிந்து அவனது தலையை வெட்டி வீழ்த்தினான். தம் மன்னனே இறந்தது கண்டு சிங்கபுரத்துப் படைகள் புறமுதுகு காட்டி ஓடி விட்டன. அமரசிம்மன் வெற்றிக் களிப்போடு வந்து தர்மாங்கதனைக் கண்டான்.

தர்மாங்கதனும் அவனைப் பாராட்டி ''பேஷ். நீ சொன்னபடி செய்து காட்டி விட்டாய். நானும் என் வாக்குறுதியைக் காக்கிறேன். உன் விருப்பம் என்ன என்று சொல்'' என்று கேட்டான். அமரசிம்மனும் ''என் விருப்பம் அரசகுமாரியை மணப்பதே. அதை நிறைவேற்றுங்கள்'' என்றான். அதைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டுப் போனான். ஏனெனில் அவன் தன் மகள் ஹேமாங்கனியை குமுதபுர இளவரசனுக்கு மணம் செய்து வைப்பதாக குமுதபுர மன்னனுக்கு வாக்களித்திருந்தான். ஹேமாங்கனி தர்மாங்கதனின் ஒரே மகள்.

தான் வாக்களித்தபடி அரசகுமாரியை எப்படி இருவருக்கு மணம் முடிக்க முடியும் என்று தர்மாங்கதன் யோசித்துக் கவலைப்பட்டான். அவன் தன் மகள் ஹேமாங்கனியிடம்



அது பற்றிக் கூறவே. அவளும் சிரித்த வாறே ''கவலைப்படாதீர்கள். உங் களது இரு வாக்குறுதிகளையும் நீங் கள் காப்பாற்றிக் கொள்ளும்படி நான் வழி செய்கிறேன்'' என்றான்.

அவள் தன் தோழி சுவர்ணாவை அரசகுமாரியைப் போல ஆடைகளை யும் ஆபரணங்களையும் அணிவித்து அவளை அமரசிம்மன் தங்கி இருந்த விடுதிக்கு அனுப்பினாள். அவளும் ஹேமாங்கனி சொல்லிக் கொடுத்தி ருந்தது போல அமரசிம்மனைக் கண்டு ''நான் அரசகுமாரி, உங்களைக் காணவே வந்திருக்கிறேன். நீங்கள் இதற்கு முன் என்னைப் பார்த்த தில்லை. நானும்தான் இப்போது முதல் முறையாகப் பார்க்கிறேன்'' என்றாள்.

அமரசிம்மன் அவளைப் பார்த்து கற்சிலையாக நின்றான். பிறகு அவன் ''ஆம். என் பாட்டி அரசகுமாரிகளை வர்ணித்தபடியும் நான் கற்பனை செய்து கொண்டிருந்த படியும் நீ இருக் கிறாய். நான் இதுவரை அரசகுமாரி யைப் பார்த்ததில்லையானாலும் அரச குமாரி இவ்வளவு அழகாக இருப் பாளென நான் எதிர்பார்க்கவில்லை. உன்னை மணக்க முகூர்த்தம் வைக் கும்படி மன்னரிடம் சொல்'' என்று கூறி அவளை அனுப்பினான்.

சுவர்ணாவும் அரண்மனைக்கும் போய் தர்மாங்கதனிடமும் ஹேமாங் கனியிடமும் நடந்ததைக் கூறினாள். தர்மாங்கதனோ ''இதென்ன விபரீ தம்! விஷயம் வெளிப்பட்டால் அமர சிம்மன் என்ன செய்வானோ?'' என்று கவலைப்பட்டவாறே கூறினான்.

ஹேமாங்கனியோ ''ஒன்றும் அவர் சொல்லமாட்டார். அவர் விரும் பியது அரசகுமாரியை மணக்கத் தானே யொழிய எந்தக் குறிப்பிட்ட அரசகுமாரியையும் அல்ல. அதனால் நீங்கள் சுவர்ணாவை உங்கள் மகளாக சுவீகாரம் எடுத்துக் கொள்ளுங்கள். அவள் அப்போது அரசகுமாரி ஆகி விடுவாள். அதனால் இவளை உங் களது வாக்குறுதியின் படி அமரசிம்ம னுக்கு மணமுடித்து வைக்கலாம்'' என்றாள்.

தர்மாங்கதனும் ஹேமாங்கனி சொன்னபடியே சுவர்ணாவைத் தன் மகளாக ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டு அமரசிம்மனுக்கு மணம் செய்து வைத்தான்.





# பொன்மயமான பொழுதுகள் 6

## ரோபொட் கணக்கு

செவ்வாய் கிரகம் கி.பி. 2001

ஓ! பூலோகவாசிகளே! இங்கு வான வீதியில் செல்லும் ஊர்திகளை ரோபெட்கள் தயாரிக்கின்றன.

54 ரோபெட்கள் இங்கு தினமும் 54 ஊர்திகளைத் தயாரிக்கின்றன.

ஒவ்வொரு அல்ஃபா ரோபொட்டும் இரு ஊர்திகளைத் தயாரிக்கின்றது.

இரண்டு பீட்டா ரோபொட்டுகள் சேர்ந்து மூன்று ஊர்த்திகளைத் தயாரிக்கின்றன.

மூன்று காமா ரோபொட்டுகள் தினமும் ஒரு ஊர்தியைத் தயாரிக்கின்றன.

இப்போது நீங்கள் எவ்வளவு அல்ஃபா, பீட்டா, காமா ரோபொட்கள் செயல்படுகின்றனவென்று கூற முடியுமா?





# அம்புலிமாமா நேரம்

## கேள்வி கணைகள்

1 ரொபொடா என்ற செக் மொழிச் சொல்லிருந்து ரோபொட் என்ற சொல் உருவானது. இதன் பொருள் கடின மான வேலை என்பது. இந்தச் சொல்லை நம்மிடையே அறிமுகப்படுத்தியவர் யார்?

2 மெத்லெவ் ரயில்கள் சில நாடுகளில் தயாரிக்கப்படுகின்றன. இவை மணிக்கு 500 கி.மீ. வேகத்தில் செல்லக் கூடியவை சாதா ரண ரயில்களைப் போலல்லாது இவற்றிக்குச் சிறப்பாக ஒன்று வேண்டும். அது என்ன?



3 உங்கள் டெலிவிஷன் செட்டின் திரை வண்ணத்தில் அமையவில்லை. ஆனால் படங்கள் மூன்று அடிப்படை வண்ணங்களைக் கொண்டு வண்ணப் படங்களைக் காட்டுகிறது அந்த வண்ணங் கள் யாவை?





**4** 1752ல் மின்னலில் மின் சக்தி உள்ளதென நிரூபிக்க விஞ்ஞானியும் ராஜதந்திரியுமான ஒருவர் இடிஇடிக்கும் மேகங்களிடையே ஒரு பட்டத்தைப் பறக்க விட்டார். பட்டக் கயிறின் முனை மின் சக்தியைக் காட்டும் கருவியோடு இணைக்கப் பட்டது. அந்த விஞ்ஞானி யார்?

2000 ??

**5** லீப் ஆண்டு நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை வருவது. ஒரு ஆண்டை நான்கால் வகுத்து மீதும் வரா விட்டால் அந்த ஆண்டு லீப் ஆண்டாகும். ஆனால் 100 ஆல் வகுபடும் 1800, 1900, 2100 ஆண்டுகள் லீப் ஆண்டுகளல்ல. கி.பி. 2000 என்ற ஆண்டு என்னவாம்?



**6** 'ப்லீம் சாயில் லைன்' எனப்படுவது கப்பல்களுடன் தொடர்பு கொண்டது. எங்கே இதைக் காணலாம்.



**7** பிராங்கன்ஸ்டீன் என்ற தனது நாவலில் அதன் ஆசிரியர் மேரி ஷெல்லி எவ்வாறு மனித அவயவங்களை ஒன்று சேர்த்து ஒரு பயங்கர ராட்சஸப் பிறவி உருவாக்கப்பட்டது என வர்ணிக்கிறார் அந்த நாவலில் பிராங்கன்ஸ்டீன் யார்?

# ரோபொட் வரையக் கற்றுக்கொள்ளுங்கள்

ரோபொட் உருவத்தை வரைவது எப்படி? எளிதே! அதைக் குச்சிகளாகப் பிரியுங்கள் இதோ செய்யும் விதம்.



1. ஒரு மனித உடல் கூட்டை வரையவும்.



2. தலையை உருண்டையாயும், கை கால்கள், மார்பு, தொடைகள், கால்களை உருண்டைக்குழாய்கள் வடிவில் வரைக



3. உடல் கூட்டுக் கோடுகளை அழித்து தசைகளையும் மூட்டுகளையும் வரைக.



4. கடைசியில் அதை சரிப்படுத்த, ரோபொட் கிடைக்கும். எளிதாகத்தானே உள்ளது?



5. ரோபொட்டிற்கு பதில் 'கௌபாய்' வேண்டுமானால் இரண்டாவது படத்தை இவ்வாறு திருத்தி வரைக. முகம் சிரிப்பது போல வரைய மறந்து விடாதீர்கள். புன்னகை மனித இயல்பு!



# மகாபாரதம்

சிவனைத் தரிசிக்கும்படி அர்ஜுனனுக்கு யோசனை கூறிவிட்டு இந்திரன் மறைந்து போனான். அர்ஜுனனும் அழகிய வனத்தை தேர்ந்தெடுத்து அதில் இருந்து கொண்டு சிவபிரானைக் குறித்துத் தவம் செய்யலானான். அவனது கடுந் தவத்தால் அவனைச் சுற்றி இருந்த பகுதி அவனது தவத்தின் வெப்பத்தால் சூடாகியது. அதைக் கண்ட ரிஷிகள் சிவபிரானிடம் போய் "எம்பிரானே! அர்ஜுனன் தங்களைக் குறித்துத் தவம் செய்து கொண்டிருக்கிறான். அவனது தவத்தின் சக்தியால் வெப்பம் பரவி செடி கொடிகளைத் தாக்கி எரிக்கிறது. மிருகங்களும் பறவைகளும் வெப்பம் தாங்காமல் துடிக்கின்றன. எங்களாலும் அந்த வெப்பத்தைத் தாங்க முடியவில்லை. எனவே தாங்கள் அவன் முன் தோன்றி அவனது விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்" என்று வேண்டினார்கள்.

சிவபிரானும் அர்ஜுனனின் விருப்பத்தை நிறைவேற்றுவதாகக் கூறி அவர்களை அனுப்பினார். ரிஷிகள் சென்ற பின் அவர் வேடனைப் போல மாறி பார்வதியையும் சிவகணங்களையும் வேட இனத்தவர்களாக ஆக்கி எல்லோரையும் அழைத்துக் கொண்டு அர்ஜுனன் தவம் செய்து கொண்டிருக்கும் இடத்திற்கு வந்தார்.

இதே சமயத்தில் மூகன் என்ற ராட்சஸன் பன்றியின் உருவில் உறுமிக் கொண்டே வந்து அர்ஜுனனைத் தாக்க ஓடினான். உறுமல் சத்தம் கேட்டு அர்ஜுனன் கண் திறந்து பார்த்துத் தன் வில்லை எடுத்து அதில் அம்பை வைத்துப் பன்றி மீது எய்தான். இதே சமயம் வேடனது வேடத்தில் வந்த சிவனாரும் அப்பன்றியின் மீது அம்பு எய்தார். இருவரது அம்புகளும் ஒரே சமயத்தில் பன்றியைத்



தாக்கின. பன்றி ராட்சஸ உருவை அடைந்து மரண ஓலமிட்டு இறந்தது.

அப்போது அர்ஜுனனுக்கும் பரம சிவனுக்குமிடையே யார் பன்றியைக் கொன்றார்கள் என்பது பற்றி பலத்த வாக்குவாதம் மூண்டது. அர்ஜுனன் தானே முதலில் அம்பை எய்ததாகக் கூற, பரமசிவனோ தானே முதலில் அம்பால் பன்றியை அடித்ததாகச் சொன்னார். அர்ஜுனனோ "நீ செய்தது தவறு. நான்தான் முதலில் அம்பால் இப் பன்றியை அடித்தேன். நீயோ எனக்குப் பிறகுதான் அம்பை எய்தாய்" என்றான். வேடனோ "நீ சொல்வது சரியல்ல. நான்தான் முதலில் அம்பை எய்து பன்றியைக் கொன்றேன். எனக்குப் பிறகுதான் நீ அம்பை எய்தாய். நீ செய்ததுதான் தவறு" என்றான். இப்படியாக இருவரும் சற்றும் சளைக்காமல் தம் உரிமை பற்றி வாத விவாதம் புரிந்து கொண்டே இருந்தார்கள். வாக்கு வாதம் முற்றவே இருவரும் சண்டை போடலானார்கள்.

அர்ஜுனன் சிவனார் மீது அம்புகளைப் பொழிந்தான். ஆனால் வேடன் வேடத்திலிருந்த சிவனார் அவற்றையெல்லாம் தடுத்து "பூ! இவ்வளவுதானா? வேறு சக்தி வாய்ந்த அம்புகளே இல்லையா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார். தன் அம்புகள் அந்த வேடனை எதுவும் செய்யாதது கண்டு அர்ஜுனன் ஆச்சரியப்பட்டு அந்த வேடன் சாமான்யப் பிறவி அல்ல என்றும் தெய்வீக சக்தி உடையவன் என்றும் தெரிந்து கொண்டான்.

ஆனாலும் அர்ஜுனன் அம்புகள் எய்வதை நிறுத்தி விடவில்லை. அவனது அம்புராத் தூணியிலிருந்த அம்புகள் எல்லாம் தீர்ந்து போயின. அக்ஷய தூணியே காலியாகியதென்றால் எதிரில் நிற்பவன் தேவனே என அர்ஜுனன் எண்ணினான். அப்போதும் அவன் தன் வில்லின் முனையால் அந்த வேடனை அடிக்க முயன்றான். அப்போது அவன் கையிலிருந்து காண்டீபமும் மாயமாய் மறைந்து போயிற்று. உடனே அவன் தன் வாளை எடுத்து வேடனைத் தாக்கினான். வாளும் ஒடிந்து துண்டு துண்டுகளாகியது. அர்ஜுனன் அப்போது எவ்வித ஆயுதமும் இல்லாமல் நின்றான்.

அப்போது அர்ஜுனன் மரக்கிளை ஒன்றை ஒடித்து வேடனின் மீது எறிந்தான். கற்களை எறிந்தான். எதுவும் வேடனை ஒன்றும் செய்யவில்லை. அதனால் அவன் வேடன் மீது பாய்ந்து

தன்கைகளால் குத்தினான். வேடனும் பதிலுக்கு அர்ஜுனனைக் குத்தலானான். வேடனின் அடிதாங்க முடியாமல் அர்ஜுனன் தன் நினைவை இழந்து விழுந்து விட்டான். அவன் நினைவு வந்ததும் எழுந்து நீராடி மணலால் சிவலிங்கத்தை உருவாக்கி அதை மலர்களால் பூஜை செய்தான்.

அவன் அந்த லிங்கத்தின் மீது போட்ட மலர்களெல்லாம் வேடனின் மேல் போய் விழுந்தது கண்டு ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தான். தான் இதுவரை போர் புரிந்தது சாதாரண வேடனோடு அல்ல, சிவபெருமானோடு என்று அவன் தெரிந்து கொண்டு வேடனின் கால்களில் விழுந்து ''ஐயனே! தங்களை இன்னாரென்று தெரிந்து கொள்ளாமல் தங்களோடு வீண் வாக்குவாதம் செய்தும் போராடியும் பெருத்த அபசாரம் செய்து விட்டேன். என்னை மன்னித்து எனக்குக் காட்சி தந்து திருவருள் புரிய வேண்டும்'' என்று பணிவுடன் கூறி வணங்கினான். அப்போது வேடன் சிவபிரானானார். அவர் அர்ஜுனனைத் தூக்கி நிறுத்தி ''அர்ஜுனா! உன் போன்ற வீரன் மூவுலகிலும் இல்லை. நீ எனக்குச் சமமானவன். அதனால் என் திவ்விய அஸ்திரத்தை உனக்குக் கொடுக்கிறேன். அதை வைத்திருக்க நீ தகுதி பெற்றவனே, அதனால் உன் எதிரிகளை வென்று பேரும் புகழும் பெறுவாய்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அர்ஜுனன் மீண்டும் அவரது கால்களில் விழுந்து வணங்கித் தன் அபசாரத்தை மன்னிக்கும்படி வேண்டினான். சிவனாரும் அவனை எழுப்பிக் கட்டித் தழுவி ''அர்ஜுனா! நீ முன் பிறப்பில் நரன் என்பவன். நீயும் நாராயணன் என்ற ரிஷியும் சேர்ந்து தவம் செய்து துஷ்டர்களைக் கொன்று தேவேந்திரனின் பதவியை நிலைக்கச் செய்தீர்கள்! அப்போது உன் கையில்





இருந்த வில்தான் இப்போதும் உன்னிடம் உள்ளது. என் சக்தியால்தான் உன் வில் மறைந்து அக்ஷயதூணியும் காலியாகியது. சரி. நீ என்ன விரும்புகிறாய்?'' என்று கேட்டார்.

அர்ஜுனனும் ''பரமேஸ்வரா! நான் பிற்காலத்தில் பீஷ்மர், துரோணர், கர்ணன், துரியோதனன் முதலியோருடன் போர் புரிய நேரிடலாம். அவர்களை வெல்ல பசுபதாஸ்திரமும், பிரம்மசிரோநாமாஸ்திரமும் எனக்கு வேண்டும். அவற்றைக் கொடுத்தருளுமாறு பிரார்த்திக்கிறேன்'' என்றான். சிவனாரும் அவற்றைக் கொடுத்து அவற்றை உபயோகிக்கப் பயன்படும் மந்திரத்தையும் உபதேசித்தார். பின்னர் அவர் பார்வதி சமேதராக அவனுக்கு தரிசனம் தந்து மறைந்தார்.

அர்ஜுனன் இவ்வாறு புதிய ஆயுதங்களைப் பெற்றதாலும் சிவனே அவனது உடலை ஸ்பரிசித்ததாலும் புத்துணர்ச்சியும், ஊக்கமும் உற்சாகமும் அடைந்தான். அப்போது இந்திரன், எமன், வருணன், குபேரன் முதலியவர்களும் அர்ஜுனன் தவம் செய்யும் இடத்திற்கு வந்து தம் சக்தி வாய்ந்த ஆயுதங்களையும் அவனுக்கு அளித்தார்கள். இந்திரன் அவனை மிகவும் பாராட்டி ''அர்ஜுனா! நீ உறுதியுடன் இருந்து தவம் செய்து பரமேஸ்வரனிடமிருந்து அரிய அஸ்திரங்களைப் பெற்றிருக்கிறாய். இவ்வளவு காலமாகக் கடுந்தவம் செய்து உடல் மெலிந்திருக்கிறாய். நீ தேவலோகத்திற்கு வந்து கொஞ்ச காலம் சுகமாக இருந்து விட்டுப் பிறகு நீ உன் சகோதரர்களைக் காணச் செல்லலாம்'' என்று கூறி அவனை தேவலோகத்திற்கு அழைத்துச் சென்றான். இந்திரனின் ரதத்தில் அவன் ஏறி அமர, மாதலியும் ரதத்தை ஓட்டிக் கொண்டு தேவலோகத்திற்குச் செல்லலானான்.

வழியில் அவனுக்கு மாதலி இறந்து போய் வீரசொர்க்கம் அடைந்த மாவீரர்களையும், கந்தர்வர்களையும் அப்ஸரர்களையும் காட்டி அவர்களைப் பற்றிய விவரங்களையும் அவனுக்குக் கூறினான். சற்று நேரத்தில் அமராவதி நகரம் தென்பட்டது. அதன் வெளிப்புற வாசல் கோபுரம் உயர்ந்து விளங்கியது. அதைக் கண்டு அர்ஜுனனின் மனம் மகிழ்ந்து போயிற்று.

அர்ஜுனன் அமராவதி நகரில் ரதத்திலிருந்து இறங்கியதும் தேவர்

கள் அவனை எதிர்கொண்டு அழைத்தார்கள். கந்தர்வர்களும், யட்சர்களும் மங்களகானம் பாடி வரவேற்றார்கள். நாரதர் முதலிய முனிவர்கள் அவனை ஆசீர்வதித்தார்கள். பின்னர் சுதர்மம் என்ற தேவேந்திரனின் சபைக்குள் அர்ஜுனன் சென்றான்.

தேவந்திரன் அச்சபையில் தன் ஆசனத்தில் அமர்ந்தான். சபையின் இருபுறங்களில் மற்ற தேவர்கள் அமர்ந்தனர். கந்தர்வர்கள் இந்திரனைப் புகழ்ந்து பாடிக் கொண்டிருந்தார்கள். சித்தர்கள், சாரணர்கள், மருத், விஸ்வ தேவர்கள், வசுக்கள், ருத்திரர்களெனப் பலரும் அச்சபையில் நிறைந்திருந்தனர். இந்திரனின் அரியாசனத்தின் மீது வெண்குடை இருந்தது. அவனுக்கு இருபுறமும் அப்ஸர ஸ்திரீகள் நின்று வெண்சாமரங்களை வீசிக் கொண்டிருந்தார்கள்.

அர்ஜுனன் இந்திரனை வணங்கி நிற்கவே, இந்திரனும் அவனது கையைப் பிடித்துக் கொண்டு தன் அருகிலிருந்த ஆசனத்தில் அமரவைத்தான். அவன் தன் மகனான அர்ஜுனனைப் பார்த்துப் பார்த்து உள்ளம் பூரித்துப் போனான். தும்புரு இன்னிசைஇசைக்க நாரதர்தன் வீணையை மீட்டி இனிய கான மழை பொழிந்தார். தேவர்கள் அர்ஜுனனைப் பல விதத்திலும் உபசரித்தார்கள். மாலை அணிவித்தார்கள். வாசனைத் திரவியங்களைப் பூசினார்கள்.

அர்ஜுனன் தங்க அழகிய விடுதி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அங்கு அவனை தேவர்கள் அழைத்துச் சென்றார்கள். அர்ஜுனனும் தேவலோகத்தில் பல நாட்கள் இருந்து




தேவர்கள் அஸ்திரங்களைப் பிரயோகிக்கும் முறைகளைக் கற்றுக் கொண்டான். இதே சமயம் அர்ஜுனனுக்கு இசைப் பயிற்சியும், தேவர்களின் நாட்டியமும் கற்றுக் கொடுக்க சித்திரசேனன் என்ற கந்தர்வனை இந்திரன் நியமித்தான். அவற்றையும் அவன் நன்கு கற்றுக் கொண்டான். அவன் தேவலோகத்தில் எல்லா வசதிகளும் பெற்று சுகமாக இருக்கும் நிலையில் இருந்தாலும் வனவாசம் செய்யும் தன் சகோதரர்களையும், தன் தாயான குந்தி தேவியையும் அவ்வப்போது எண்ணி வருந்தலானான்.

அர்ஜுனன் இசைக் கலையிலும், நாட்டியத்திலும் அடைந்த தேர்ச்சியைக் கண்டு தேவர்கள் வியந்து பாராட்டினார்கள். ரம்பை, திலோத்தமை, ஊர்வசி, ஆகியோர் அவனது

அழகைக் கண்டு பிரமித்தார்கள்.

ஊர்வசியோ அர்ஜுனனைக் கண்டு அவனிடம் தன் மனதைப் பறி கொடுத்து விட்டாள். அதனால் ஒரு நாள் அவள் அர்ஜுனனின் விடுதிக்குச் சென்றாள். அழகிய மலர்கள் சூடி, வாசனை திரவியங்களைப் பூசிக் கொண்டு அழகு பிம்பமாக வந்த ஊர் வசியைக் கண்டு அர்ஜுனன் திகைத் துப் போனான். அவன் அவளை வணங்கி ''தாயே! தாங்கள் இங்கு விஜயம் செய்துள்ள காரணத்தை நான் அறியலாமா? என்னால் தங்களுக்கு ஏதாவது வேலை ஆக வேண்டுமா?'' என்று பணிவுடன் கேட்டான்.

ஊர்வசியோ ''அர்ஜுனா! உன்னை அடையவே நான் வந்திருக்கிறேன்'' எனவே அர்ஜுனன் காதுகளைப் பொத்திக் கொண்டு ''சிவ சிவா! அம் மணீ! நீங்கள் என் தாயாருக்குச் சம மானவர். இந்த எண்ணமே என் மன தில் நிலைத்து நிற்கிறது'' என்றான். ஊர்வசியோ ''அர்ஜுனா! இது தேவ லோகம். இங்குள்ள பழக்க வழக்கங் களும் உறவுகளும் பூலோகத்திலிருந்து மாறுபட்டவை. எனவே எதையோ கற்பனை செய்து கொண்டிருக்காமல் என் விருப்பப்படி நட'' என்றாள்.

அப்போது அர்ஜுனன் ''நீங் களெல்லாம் தேவர்கள். எதைச் செய் தாலும் உங்களுக்கு அது தவறு இல்லை. நானோ மானிடன். எனவே உங்கள் பழக்க வழக்கப்படி நான் நடக்க முடியாது. நான் உங்களை என் தாயார் போலத்தான் எண்ண முடியும். வேறு எவ்விதமாயும் முடியாது'' என்றான். அது கேட்டு ஊர்வசி கோப மும் ஆத்திரமும் கொண்டு அவனை அலியாகப் போகும்படிச் சபித்து விட்டுப் போய்விட்டாள்.

அர்ஜுனன் மறுநாள் தனக்கு ஊர் வசி கொடுத்த சாபம் பற்றி இந்திரனி டம் கூறினான். இந்திரனும் ''பேஷ்! உன் மன உறுதியைப் பாராட்டு கிறேன். ஊர்வசி கொடுத்த சாபத்தை நான் மாற்றி விடுகிறேன். நீ ஒரு வருட காலம் அஞ்ஞாதவாசம் செய்யும் போது மட்டுமே அலியாக இருப் பாய். இதனால் உனக்கு நன்மைதான் ஏற்படும். அந்த ஒருவருடம் முடிந்த தும் இந்த சாபமும் போய் விடும்'' என்றான்.

அர்ஜுனனும் அது கேட்டு திருப்தி அடைந்தான்.



# வைத்தியம் எப்படி?

மோப்பூரில் தாயாரம்மாள் தன் வீட்டில் பல வேலைக்காரர்களை அமர்த்திக் கொண்டு எல்லா வேலைகளையும் செய்ய வைத்தாள். ஆனால் அவள் தன் வீட்டிற்கு மருமகள்கள் வந்த பின் வேலைக்காரர்களை நிறுத்திவிட்டு அவர்கள் செய்து வந்த வேலைகளை எல்லாம் தன் மருமகள்களின் மீது சுமத்தினாள்.

இதன் பிறகு அவள் தினமும் வேளா வேளைக்கு நன்கு சாப்பிட்டு விட்டுச் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து வரலானாள். இதனால் ஒருவேலையையும் அவள் செய்யாததால் அவள் உடல் மிகவும் பருத்துக் கொண்டே போயிற்று. தன் உடலின் பருமனைக் குறைக்க அவள் எவ்வளவோ வைத்தியர்களிடமிருந்து என்னென்னவோ மருந்துகளை வாங்கிச் சாப்பிட்டுப் பார்த்தும் உடலின் பருமன் குறையவில்லை.

அப்போது அவள் புத்தூரிலுள்ள ஒரு வைத்தியர் உடல் பருமனைக் குறைப்பதில் தேர்ந்தவர் என்று கேள்விப்பட்டுப் புத்தூருக்குச் சென்றாள். அந்த வைத்தியரும் அவளைப் பார்த்து ஒரு பாட்டிலில் நூறு மாத்திரைகளைப் போட்டுக் கொடுத்தார். தாயாரம்மாளும் ''இதைச் சாப்பிடும் முறை என்ன?'' என்று கேட்டாள்.

வைத்தியரும் ''இதைச் சாப்பிடக் கூடாது. வீட்டில் இதைத் தரையில் கொட்டி விட்டு காலி பாட்டிலைக் கைக்கு எட்டும் உயரத்தில் வைக்க வேண்டும். பிறகு நீ குனிந்து ஒவ்வொரு மாத்திரையாக எடுத்து எழுந்து நின்று பாட்டிலில் போட வேண்டும். இப்படியே நீ தினமும் செய்தால் சில நாட்களுக்குப் பிறகு உன் உடலின் பருமன் குறையும்'' என்றார்.



அம்புலிமாமா அனுபந்தம் - 96

நம் நாட்டு மரங்கள்

# அரளி

சாதாரணமாக அரளி மரங்களை ஆலயங்களின் நந்தவனங்களிலும், மதவழிபாட்டு இடங்களிலும் காணலாம். அரளியில் பல வகைகள் உண்டு. செவ்வரளி, வெள்ளை அரளி, தங்க அரளி, அடுக்கு இதழ் அரளி என்பன சிலவாகும். இவற்றில் செவ்வரளியைப் பரவலாகக் காணலாம். வெள்ளை அரளியும் பல இடங்களில் தென்படுகிறது. இது பார்க்க அழகாயும் நறுமணமும் கொண்டிருக்கும்.

நம் நாட்டில் காணப்படும் வெள்ளை அரளி மற்ற நாடுகளுக்கு மெக்ஸிகோ நாட்டிலிருந்து பரவியதாகக் கருதப்படுகிறது. இந்த வகை அரளி மாதா கோவில்களிலும் மசூதிகளிலும் வளர்க்கப்படுகிறது. அரளி இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலுமே தென்படுகிறது.

இந்த மரம் ஆறு மீட்டர் உயரம் வரை வளரக்கூடியது. இதன் கிளைகள் உறுதியாய் நான்கு பக்கங்களிலும் பரவி வளர்ந்திருக்கும். இதன் இலைகள் நீண்டு ஈட்டி முனை வடிவில் சற்று தடிமனாக இருக்கும். இலையின் நீளம் 30 செ.மீ. இருக்கும். கிளையின் முனையில் இலைகள் ஒரு கொத்தாக இருக்கும். இலைகள் மத்தியக் கிளைப் பகுதியில் சம தூரத்தில் இருக்கும்.

மற்ற மரங்களைப் போலவே இந்த மரமும் தன் இலைகளைக் குளிர் காலத்தில் உதிர்த்து விடும். இதன் மலரின் இதழ்கள் மஞ்சளாகவும் வெள்ளையாகவும், சிவப்பாகவும் இருக்கும். ஒரு ஆண்டில் இம்மரத்தில் மலர்கள் பிப்ரவரியிலிருந்து அக்டோபர் வரை மலர்ந்து கொண்டிருக்கும்.

சில அரளி மலர்கள் மரத்தின் வேர்ப் பகுதிகளில் கூட மலர்வது உண்டு. அரளி மலர்களை மாலைகளில் கட்டி ரோஜாவோ அல்லது மல்லிகையோ என நினைக்கும்படி இந்நாட்களில் செய்தும் விடுகிறார்கள்!



*நம் நாட்டு முனிவர்கள் - 15*

# ஜாஜலி

மனிதநடமாட்டமேஇல்லாதஒருகாட்டில் ஜாஜலிஎன்றமுனிவர்கடும்தவம்செய்து கொண்டிருந்தார். ஐம்புலன்களை அடக்கி அன்ன ஆகாரம் இல்லாமல் காற்றிலிருந்தும் சூரிய ஒளியிலிருந்தும் உடல் வளர்ச்சிக்கான ஊட்டத்தை அவர் பெற்று வந்தார். வெயில், மழை, புயல் எதுவும் அவரது நிலையைக் குலைக்க முடியவில்லை.

ஒருநாள் அவர் தியானம் கலைந்து கண் விழித்து உதயசூரியனைப்பார்த்தவாறுநின்று கொண்டிருந்தார். அப்போது ஒரு ஜோடிப் பறவைகள்பறந்து வந்து அவரது தலைச்சடைகளின் மீது உட்கார்ந்தன. அவற்றிற்கு துன்பம் நேரக் கூடாது என எண்ணி அவர் ஆடாது அசையாது நின்றார். அப்போது அப்பறவைகளில் ஒன்று அம்முனிவரின் தலைமீது முட்டைகளை இட்டது. பின்னர் அப்பறவைகள் பறந்து போயின.

அப்பறவைகள் மறுபடியும் வருமென அவர் அசையாமல் நின்றார். இப்படியே சில நாட்கள் சென்றன. ஒருநாள் அம்முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிப்பட்டன. அப்போதும் ஜாஜலி அசையாமல் நின்று கொண்டிருந்தார். பெண் பறவை தினமும் வந்து தன் குஞ்சுகளுக்கு உணவு கொடுத்தது. சில நாட்கள் இப்படியே கழிந்தன. ஒருநாள் தாய்ப் பறவை குஞ்சுகளோடு முனிவரின் சடையிலிருந்து பறந்து சென்று விட்டது.

அதன்பிறகும் ஜாஜலி அசையாமல் நின்றபடியே தினமும் அப்பறவைகள் மறுபடியும் வருமா என்று எதிர்பார்த்தார். ஆனால் அப்பறவைகள் வரவில்லை. அவர் ஒரு மாத காலம் நின்றும் அவை வராததால் இனி அவை வராது என உறுதிப்படுத்திக் கொண்டு ஆற்றிற்குப் போய்க் குளிக்கலானார். அப்போது அவர் தம் மனதில் "ஆகா! நான் அப்பறவைகளுக்காக எவ்வளவு சிரமப்பட்டேன்! எவ்வளவு தியாகங்களைச்செய்தேன்!!" என்று எண்ணிப் பெருமைப் படலானார்.

அப்போது ஒரு அசரீரி "ஓ! நீ உயர்ந்தவனென எண்ணுகிறாயா? அப்படியானால் நீ காசியில் வாழும் வணிகன் துலாதரனைப் பற்றி அறிந்திருக்கவில்லையா?" என்று கூறியது. அதைக் கேட்ட ஜாஜலி ஆச்சரியப்பட்டு உடனேயே காசிக்குச் சென்றார். அங்கு துலாதரன் தன் பெரிய குடும்பத்தைக் காப்பாற்றி வந்ததோடு தன் அக்கம் பக்கத்தவருக்கும் உதவி வந்தான். கொஞ்சமும் கர்வம் கொள்ளாமல் எளிய வாழ்க்கை வாழ்ந்து திருப்தியுடன் அவன் இருப்பதைக் கண்டு ஜாஜலி தன்னை விட அவன் மிக உயர்ந்தவன் எனக்கண்டு தன் கர்வத்தை விட்டொழித்தார்.

அவர் அந்த வணிகனுடன் பல விஷயங்கள் பற்றிப் பேசி வேதாந்த ரகசியங்களை அறிந்து கொண்டார். அவர் அதன்பின் கர்வத்தை விட்டொழித்து பணிவுடன் நடக்கலானார்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. முஸ்லீம்களின் புனித மதநூல் எது?
2. 'புல் பைட்' எந்த நாட்டில் பிரபலமாக உள்ளது?
3. நோயாளியின் இதயத் துடிப்பைக் கண்டறிய பயன்படும் கருவியின் பெயர் என்ன?
4. நீர்வாழ் இனங்களின் காட்சியகத்தின் பெயர் என்ன?
5. நாம் நாட்டில் ஓட்டுரிமை பெற ஒருவனின் குறைந்த பட்ச வயது எவ்வளவு?
6. நகங்களை வெட்டினால் ஏன் வலிப்பதில்லை?
7. தங்கம் எந்த நாட்டில் அதிக அளவில் கிடைக்கிறது?
8. உலகில் மக்கட் தொகை அதிகமுள்ள நாடு எது?
9. கண்ணாடி எந்த மூலப் பொருளால் தயாரிக்கப்படுகிறது?
10. பூமியின்மேற்பரப்பு, தட்பவெப்பம், பூமியின்சாரம், தாவரங்கள், மனிதர்கள் ஆகியவை பற்றி எந்த இயல் கூறுகிறது?
11. பூமியின் மேற்பரப்பின் கீழ் ஏற்படும் அதிர்ச்சிகளுக்கு என்ன பெயர்?
12. சந்திர மண்டலத்தில் முதலில் அடி எடுத்து வைத்தவர் யார்?
13. 'கிவீஸ்' என்பது எந்த நாட்டவரைக் குறிக்கும்?
14. பெர்ஸியாவின் இன்றையப் பெயர் என்ன?
15. நத்தை எவ்வளவு நேரம் தூங்கும்?

## விடைகள்

1. திருக்குரான்.
2. ஸ்பெயின், மெக்ஸிகோ.
3. ஸ்டெதஸ்கோப்.
4. அக்வேரியம்.
5. 18 ஆண்டுகள்.
6. நகத்தில் நரம்புகள் இல்லை.
7. தென் ஆப்பரிக்கா.
8. சீனா
9. மணல்
10. புவிஇயல்.
11. பூகம்பங்கள்
12. நீல் ஆம்ஸ்ட்ராங், எட்வின் ஆல்ட்ரின்.
13. நீயூஜிலாந்து.
14. ஈரான்.
15. மூன்று வருடகாலம்.

# பொன்மயமான பொழுதுகள் நெ. 5 விடைகள்



4. பறவைகளின் எலும்புகள் இறகுகளை விட வேலசாக இருப்பதால்தான்.

5. ஏழு எலும்புகள்!

6. கிங்காங்.

7. நெருப்புக் கோழி சாதாரண ஒரு நெருப்புக் கோழியின் முட்டை 1.6 கி.கிராம் இருக்கும்.



1. நெஸ்ஸி, லாச் நெஸ் பயங்கர மிருகம்.

2. திபத், அதை 'எடி' என்கிறார்கள். மேற்கத்தியர் 'மிகக்கொடிய பனி மனிதன்' என்கிறார்கள்.



8. நீந்தாமல் இருக்க முடியாது. மற்ற மீன்களுக்கு உள்ளது போல நீந்த செதிள்கள் இதற்கு இல்லை. இது நீந்தாவிட்டால் நீரில் மூழ்கி விடும். எனவே தூங்கும் போதும் இது நீந்திக் கொண்டே இருக்கும்.

3. பெர்மோடா ட்ரையாங்கிள். இதனை 'டெவில்ஸ் ட்ரையாங்கிள்' என்றும் கூறுவர்.

### அடிப்படைத் தவறு — அது பெரிய வேட்டை

வரலாற்றிற்கு முந்தைய காலத்தில் மனிதன் டினாசரை வேட்டையாடுவது நடக்க முடியாதது. ஏனெனின் மனிதன் தோன்றுவதற்கு முன்பே டினாசர்கள் அழிந்து போயின.





# கமலாவின் கல்யாணம்

திருவேங்கடம் தன் மகள் கமலாவுடன் ஒரு வீட்டில் வாடகை கொடுத்து வாழ்ந்து வந்தார். கமலா தன் தாயைத் தன் ஐந்தாவது வயதிலேயே இழந்து விட்டாள். அதனால் அவளை வளர்த்துத் திருமணம் செய்ய வேண்டிய பொறுப்பு சொற்ப வருமானமுடைய திருவேங்கடத்தின் மீது விழுந்தது. கமலாவும் திருமண வயதை அடைந்து விட்டதால் அவரது கவலை அதிகரித்தது.

இந்த சமயத்தில் வீட்டு சொந்தக்காரன் திருவேங்கடத்திடம் ''வீட்டு வாடகையை நூறு ரூபாயிலிருந்து இரு நூறு ரூபாயாக உயர்த்தி இருக்கிறேன். அதனால் வாடகையை முன்னதாக இன்று மாலைக்குள் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் இன்று மாலை உங்கள் சாமான்களைத் தூக்கித் தெருவில் எறிந்து விடுவேன்'' என்றான்.

திருவேங்கடமோ ''இது அநியாயம்'' எனவே வீட்டுக்காரனும் ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. இந்த வாடகை கொடுப்பதானால் இருங்கள். குறைந்த வாடகையில் வீடு வேண்டுமென்றால் பேய் பிடித்த பட்டம்மாளின் வீட்டிற்குக் குடி போய் இருங்கள்'' என்று கூறினாள்.

திருவேங்கடமும் அன்று மாலை வந்து பதில் கூறுவதாகச் சொல்லி விட்டுத் தம் அலுவலகத்திற்குச் சென்றான். தந்தை போனதும் கமலா பலரிடம் விசாரித்துக் கொண்டே சென்று பட்டம்மாளின் வீட்டைத் தேடிக் கண்டுபிடித்தாள். அப்போது அந்த வீட்டின் வாசல் கதவை மூடி ஒரு இளைஞன் பூட்டிக் கொண்டிருந்தான்.

பட்டம்மாள் யாருக்கு இல்லையெனாது தன்னிடம் இருந்ததையெல்லாம் கேட்டவர்களுக்குக் கொடுத்து உதவியவள். இப்படிப்பட்டவள் மூன்று ஆண்டுகளுக்கு முன் திடீரென இறந்து போனாள். அவளது கணவன்

—எஸ். வெங்கடாசலம்—

பல ஆண்டுகளுக்கு முன்பே இறந்து விட்டான். அந்த வீட்டில் எஞ்சி இருந்தவன் அவர்களுடைய ஒரே மகன் கோபாலன். பட்டம்மாள் இறந்தபின் கோபாலனோடு அந்த வீட்டில் சமையல்காரியும் சில வேலைக்காரர்களும் இருந்தனர். ஆனால் மூன்று மாதங்களுக்குப் பின் பட்டம்மாளின் ஆவி அந்த வீட்டில் சுற்றி வருவதாகக் கூறி அவர்கள் அங்கு வேலை செய்ய மறுத்து அந்த வீட்டை விட்டுப் போய் விட்டார்கள்.

இதையெல்லாம் அறிந்திருந்தும் கமலா அந்த வீட்டிற்குச் சென்றாள். கதவைப் பூட்டிக் கொண்டிருப்பவன் பட்டம்மாளின் மகன் கோபாலனாகத் தான் இருக்க வேண்டும் என எண்ணி அவனிடம் தங்கள் பரிதாப நிலையைக் கூறி அந்த வீட்டில் வாடகைக்கு இருக்க இடம் உடனே கிடைக்குமா என்று கேட்டாள். அவள் கூறியதைக் கேட்ட கோபாலனின் மனம் இளகியது.

அவனும் ''தாராளமாக ஒரு பகுதியை வாடகைக்குக் கொடுக்கிறேன். இது பேய் நடமாடும் வீடு என்று பெயர் பெற்றுள்ளது. உங்களுக்கு வேறு வீடு கிடைக்கும் வரை தாராளமாக நீங்கள் இருக்கலாம்'' என்று கூறி விட்டுச் சாவியை அவளிடம் கொடுத்தான். கமலாவும் ''நாங்கள் பேய் பிசாசுகளில் நம்பிக்கை கொண்டவர்களல்ல'' எனவே அவனும் ''நீங்கள் இந்த வீட்டில் குடி இருந்தால் மற்றவர்களுக்கு இந்த வீட்டில் பேய், பிசாசு என்று எதுவும் இல்லை என்பது தெரிந்துவிடும். சரி, நான் என் அலுவலகத்திற்குப் போகிறேன். நீங்கள் இப்போதே உங்கள் சாமான்களை இந்த வீட்டிற்குக் கொண்டு வரலாம்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

கமலாவும் அந்த வீட்டின் கதவைத் திறந்து வீட்டைப் பெருக்கி சுத்தம் செய்தாள். பிறகு தன் பழைய வீட்



டிற்கு ஒரு வாடகை வண்டியுடன் போய் அவள் அதில் தன் வீட்டுச் சாமான்களையெல்லாம் ஏற்றிக் கொண்டு கோபாலனின் வீட்டில் கொண்டு போய் வைத்தாள். மாலை ஆகியது. அப்போது திருவேங்கடம் கோபத்தோடு வந்து ''என்ன கமலா! என்னைக் கேட்காமல் அந்த வீட்டைக் காலி செய்து விட்டு இந்தப் பேய் பிடித்த வீட்டில் சாமான்களைக் கொண்டு வந்து வைத்து விட்டாயே'' என்று கத்தினார்.

கமலாவும் நிதானமாக ''அந்த வீட்டுக்காரன் வாடகையை உயர்த்திய தோடு இன்று மாலைக்குள் பணம் கொடுக்காவிட்டால் நம் சாமான் களைத் தூக்கித் தெருவில் போட்டு விடுவதாகக் கூறினானே. அப்படி அவன் செய்தால் நமக்குத்தானே அவ மானம்? நாம் வேறொரு வீடு கிடைக் கும் வரை இங்கே இருப்போம். நீங்கள் வீடு தேடுங்கள்'' என்றாள். திருவேங்கடமும் ''ஆமாம். என்னால் பணம் புரட்ட முடியவில்லைதான். நீ செய்ததே சரி. நானும் வேறு வீடு வாட கைக்குக் கிடைக்குமா என்று பார்க் கிறேன்'' என்றார்.

கமலா அந்த வீட்டினுள் பெருக்கி சுத்தம் செய்ததோடு வீட்டைச் சுற்றி யுள்ள தோட்டத்தையுடன் சரிப்படுத் தினாள். அதன்பின் இரவு சமையலைச் செய்யலானாள். அவள் சமையலை முடித்தபோது ஒரு குரல் ''இனியும் நான் உன்னோடு பேசாமல் இருக்க முடியாது'' என்றது. கமலா குரல் வந்த திசையில் பார்த்தாள். அங்கு ஒரு பலகை மீது ஒரு பெண் பிசாசு உட் கார்ந்திருப்பதைக் கண்டாள்.

அது பட்டம்மாளாகத்தான் இருக்க வேண்டும் என எண்ணிய கமலா சிரித்தவாறே ''ஆமாம். நீங்கள் உயிரு டன் இருந்தவரை மிகவும் நல்லவள் எனப் பெயர் பெற்றிருந்தீர்கள். ஏன் இப்படிப் பிசாசாக மாறினீர்கள்? இவ்





வளவு பெரிய வீட்டில் உங்கள் மகன் மட்டும் தனியாக ஏன் இருக்க வேண்டும்?'' என்று கேட்டாள்.

அது கேட்டு அப்பிசாசு பெருமூச்சு விட்டவாறே ''என் மகன் கோபால னுக்கு விரைவில் ஒரு கல்யாணம் செய்து வைக்க நினைத்தேன். அவன் பிடி கொடுக்காமல் தட்டிக் கழித்துக் கொண்டே வந்தான். அந்த என் ஆசை நிறைவேறாததால் நான் இறந்த பின் பிசாசாகி விட்டேன். இந்த வீட்டின் கிணற்றின் பக்கத்திலுள்ள புளியமரம் தான் என் இருப்பிடம். தினமும் நள்ளிரவில் ஒரு தடவை இந்த வீட்டிற் குள் வந்து சுற்றிப் பார்த்து விட்டுப் போவேன். அப்போது வேலைக்காரர் கள் என் மகனை ஏமாற்றி அரிசி, பருப்பு, பணம் என்று திருடி எடுத்துச் செல்வதைக் கண்டேன். நான் அவர்கள் மீது பாய்ந்து மிரட்டவே அவர்கள் பயந்து தாம் எடுத்ததைக் கீழே போட்டு விட்டு ஓடி விட்டார்கள். அவர்கள் ஆத்திரம் கொண்டு வெளியே போய் இது பேய் பிசாசு வாழும் வீடு என்று பிரசாரம் செய்து விட்டார்கள்'' என்றது.

அப்போது வீட்டுக் கதவு தட்டப் படவே கமலா அதைத் திறக்க எழுந்து சென்றாள். பிசாசோ உடனே மாய மாய் மறைந்து விட்டது. இதற்கு நாலைந்து நாட்களுக்குபின் திருவேங் கடம் மாலையில் வீட்டிற்கு வந்த போது மகிழ்ச்சியுடன் ''கமலா வேறு வீடு கிடைத்து விட்டது. நாளைக்கு நாம் அங்கே போய் விடலாம்'' என் றார். இதைக் கேட்டதும் கோபால னின் முகம் வாட்ட முற்றதை கமலா கவனித்தாள்.

கோபாலனோ அவர்களிடம் எப் படித்தன் வீட்டிலேயே இருக்கும் படிச் சொல்வது என்று எண்ணித் திகைத்து அவர்கள் வீட்டை விட்டுப் போவ தால் வருத்தப்பட்டான். பேய் பிடித்த வீட்டில் இருக்க யார்தான் இசைவார் கள் என்றும் அவன் எண்ணி யோசனை யில் ஆழ்ந்தான்.

திருவேங்கடம் தம் மகளிடம் வீடு மாற்றுவது பற்றிக் கூறிவிட்டுக் குளிக் கக் கிணற்றடிக்குச் சென்றார். அவர் அங்கே போய் நின்றதுமே புளிய மரத் துப் பிசாசு குதித்து வந்து அவர் முன் நின்றது. அதைக் கண்டு அவர் நடு நடுங்கினார்.

அப்போது அந்தப் பிசாசு கனிந்த குரலில் ''திருவேங்கடம்! நான் உயிரு டன் இருந்த போது உனக்குச் செய்த உதவிகளை எல்லாம் மறந்து விட்

டாயா? நான்தான் பட்டம்மாள். பயப் படாதே நான் சொல்வதை நிதான மாகக் கேள். நான் உன் மகளிடம் நான் ஏன் பிசாசாகி அலைகிறேன் என்ப தைக் கூறி விட்டேன். நீ நாளை வேறு வீட்டிற்குப் போகப் போவதாகக் கமலாவிடம் கூறியதைக் கேட்டேன். இந்த நாலைந்து நாட்களாக என் மகன் கோபாலன் மகிழ்ச்சியுடன் காணப் பட்டான். அவன் உன் மகளை மணக்க ஆசைப்படுகிறான். நீ உன் மகளை அவனுக்குக் கல்யாணம் செய்துவை. அவனுக்கு இந்த வீடும் ஏராளமான நிலபுலன்களும் உள்ளன. உன் மகளைச் சுகமாக வைத்துக் காப்பான். அவனுக்கு விவாகம் நடந்து அதைப் பார்க்க வேண்டும் என்ற என் நெடு நாளைய ஆசை நிறைவேறியதும் நான் இங்கிருந்து போய் விடுவேன்'' என்றது.

திருவேங்கடமும் ''நீ எனக்கு எவ் வளவோ உதவி செய்திருக்கிறாய். உன் பேச்சை மீறுவேனா? நீ கூறியபடியே செய்கிறேன் என்றார். பிசாசும் ''ஆஹா! என் ஆசை நிறைவேறப் போகிறதில் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று கூறி மறைந்து போயிற்று. திரு வேங்கடமும் குளித்து விட்டு வீட்டி னுள் சென்றார்.

அவர் கவலைப்பட்டுக் கொண்டி ருக்கும் கோபாலனைப் பார்த்து ''கோபாலா நாங்கள் இந்த வீட்டை விட்டுப் போவது உனக்கு விருப்ப மில்லை என்று தெரிகிறது. என் கமலா இந்த வீட்டில் நிரந்தரமாக இருந்து விடுவது உனக்கு இஷ்டந் தானா? அதைச் சொல். அவளை நான் உனக்கு மணமுடித்து விட்டு காசி, ராமேஸ்வரம் என்று புனிதத் தலங் களுக்குப் போய் காலம் கழிக்கிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட கோபாலன் சிரித் துக் கொண்டே ''மாமா! எங்கள் திரு மணம் ஆன பின் நீங்கள் ஏன் காசி, ராமேஸ்வரம் என்று அலைய வேண் டும்? இந்த வீடு உங்கள் மகளுடையது என்றாகும் போது அதில் உங்களுக்கா இடம் இல்லை? நீங்கள் எங்கும் போய் அலைய வேண்டாம். எங்களுக் குப் பெரிய துணையாக இருந்து வாருங்கள்'' என்றான்.

கோபாலனுக்கும் கமலாவுக்கும் பட்டம்மாளின் ஆசைப்படியே திரு மணம் நடந்தது.





# ஏமாளி முருகன்

முருகன் பத்து வயதுச் சிறுவன். தந்தையைச்சிறு வயதில் இழந்து விட்டான். அதனால் அவனது தாய் அவனை மிகவும் பாசம் காட்டி வளர்த்து வந்தாள். ஏழைதான். ஆனாலும் அவனுக்கு வயிறு நிறையச் சாப்பாடு எப்படியோ போட்டு விடுவாள். முருகனும் வேளா வேளைக்குச் சாப்பிட்டு விட்டு ஒரு வேலையும் செய்யாமல் இருந்து வந்தான். அப்படி இருக்க அவனுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை.

அவன் தன் நண்பர்களெல்லாம் அவரவர்களின் குடும்பத்திற்காக ஏதாவது ஒரு வேலை செய்வதைக் கண்டான். ஆனால் அவனது தாயோ அவனை எந்த வேலையையும் செய்ய விடாமல் தடுத்தது அவனுக்கு மிகுந்த வேதனை அளித்தது. அதனால் அவன் தன் தாயாரிடம் சொல்லிக் கொள்ளாமலே வெளியூருக்குப் போய் ஏதாவது வேலை செய்வது என்ற தீர்மானத்தோடு வீட்டை விட்டு வெளியேறினான்.

அவன் தன் ஊரிலிருந்து வெகு தூரம் போனபின் ஒரு ஊரில் ஒரு பணக்காரரின் வீட்டில் வேலைக்கு அமர்ந்தான். அவன் அவர் வீட்டிலேயே இருந்து, சாப்பிட்டு வேலைகளைச் செய்து வரலானான் இப்படியே இரண்டு வருடங்கள் கழிந்தன. அவனுக்கு அப்போது தன் தாயாரை பார்க்க வேண்டுமென்ற ஆசை அதிகரிக்கவே தன் எஜமானனிடம் தான் ஊருக்குப் போக விரும்புவதைத் தெரிவித்தான்.

அவரும் ''நீ இரண்டு வருடங்கள் என்னிடம் வேலை செய்தாய். அதற்காக உனக்கு இரண்டு வெள்ளிக் கட்டிகளைக் கொடுக்கிறேன். அவற்றை பத்திரமாக உன் வீட்டிற்குக் கொண்டு போ'' எனக் கூறி இரண்டு வெள்ளிக் கட்டிகளைக் கொடுத்தார். அவனும் அவற்றை ஒரு துணியில் கட்டி எடுத்

—எஸ். சங்கரராம்—

துத்தலை மீது வைத்துக் கொண்டு தன் ஊருக்குக் கிளம்பினான். நடக்க நடக்க அவனது தலைச் சுமை மிகவும் கன மாகிக் கொண்டிருப்பது போல அவன் உணர்ந்தான். அதனால் அவன் ஒரு மரத்தின் கீழ் நின்று இளைப்பாறலா னான்.

அப்போது சற்று தூரத்தில் ஒருவன் அழகிய குதிரை மீது அமர்ந்து வந்து கொண்டிருப்பதை முருகன் கண் டான். அது போன்ற குதிரை தன்னிட மிருந்தால் உடனே தன் ஊருக்குப் போய்த் தன் தாயரை காணலாமே என்று அவன் எண்ணலானான். அப் போது அந்தக் குதிரை மீதமர்ந்து சவாரி செய்து வந்தவனும் முருகனிருந்த மரத் தடிக்கே வந்தான்.

முருகன் அவனிடம் "ஐயா! இந்தக் குதிரையின் விலை என்ன?" என்று கேட்டான். குதிரைக்காரனும் "ஏன்? நீ இதை வாங்கப் போகிறாயா? உன்னி டம் எவ்வளவு பணம் இருக்கிறது?" என்று கேட்டான். முருகனும் தன்னிட மிருந்த இரு வெள்ளிக் கட்டிகளைக் காட்டவே. குதிரைக்காரனும் அதை வாங்கிக் கொண்டு குதிரையை முருக னுக்கு விற்றான். சிறுவன் முருகனை அவன் குதிரை மீது உட்காரவும் வைத் தான். உடனே குதிரை வேகமாக ஓட லாயிற்று. அதை முருகனால் கட்டுப் படுத்த முடியவில்லை. குதிரை அங்கு மிங்கும் ஓடிக் கொண்டிருந்தது.

இதைக் கண்டு மாடு மேய்ப்பவன் ஒருவன் ஒரு தடியைக் குதிரையின் முன் நீட்டி அதன் வேகத்தைக் குறைத்து நிறுத்தினான். குதிரை திடீ ரென்று நின்றதால் முருகன் நிலை தடு மாறிக் கீழே விழுந்தான். மாடு மேய்ப்



பவன் அவனைத் தூக்கிவிட்டு "நீ குதிரை மீதேறி சவாரி செய்யப் பழகுகி றாயா அல்லது யாருடைய குதிரையை யாவது திருடிக் கொண்டுப் போய்க் கொண்டிருக்கிறாயா? ஏன் இப்படிப் போய்க் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

முருகனும் தான் இரண்டு வெள் ளிக் கட்டிகளைக் கொடுத்து அதை வாங்கியுள்ளதாகக் கூறவே மாட்டுக் காரனும் "நீ குதிரையை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்? அதை எனக்குக் கொடுத்து விட்டு என் பசு ஒன்றை ஓட்டிச் செல். அது பால் கொடுக்கும் கன்றுக் குட்டிகளும் போடும்" என்றான். முருகனும் அது லாபகரமானதே என எண்ணிக் குதிரை யைக் கொடுத்து விட்டு அவனிடமி ருந்து ஒரு பசுவை வாங்கிக் கொண்

டான். அது ஒரு நோஞ்சான் மாடு.

முருகன் அந்த நோஞ்சான் மாட்டை ஓட்டிக்கொண்டு நடந்தான். மாலை ஆனதும் அதை ஓரிடத்தில் நிறுத்தி அதன் பாலைக் கறக்க முயன்றான். ஆனால் அதன் மடியிலிருந்து ஒரு சொட்டுப் பால்கூட வரவில்லை. அதை ஆடு மேய்ப்பவன் ஒருவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் முருகனிடம் ''அந்த வற்றிப் போன பசுவிடமிருந்து பால் எப்படிக்கிடைக்கும்? இதை எங்கே வாங்கினாய்?'' என்று கேட்டான்.

முருகனும் தான் குதிரையை வாங்கி பிறகு அதற்குப் பதிலாக அந்தப் பசு மாட்டைப் பெற்றுக்கொண்டதைக் கூறினான். ஆடு மேய்ப்பவனும் ''நீ சிறுவனாக இருப்பதால் உன்னை ஏமாற்றி விட்டான். உனக்கு இந்தப் பசுவிற்கு பதிலாக ஒரு வெள்ளாட்டைக் கொடுக்கிறேன். அது உனக்கு பாலைக்கொடுக்கும். இந்த மாட்டை என்னிடம் விட்டு விடு'' என்று கூறி ஒரு வெள்ளாட்டை பிடித்து அதன் பாலைக்கறந்து முருகனுக்குக் கொடுத்தான். முருகனும் திருப்தி அடைந்து மெலிந்த பசுவுக்கு பதிலாக கொழுத்துக் கிடந்த அந்த வெள்ளாட்டை வாங்கி ஓட்டிக் கொண்டு சென்றான்.

வெள்ளாடு 'மே, மே' என்று கத்திக் கொண்டு அங்கும் இங்கும் ஓடலாயிற்று. முருகன் அதன் பின்னால் ஓடலானான். அதைக் கண்டு வழியில் வந்து கொண்டிருந்த ஒருவன் ''ஏன் தம்பி அந்த ஆட்டைத் துரத்துகிறாய்? அது உன் ஆடா?'' என்று கேட்டான். அவனிடம் ஒரு கோழி இருந்தது. முருகனும் தான் அந்த ஆட்டை வாங்கிய கதையை முழுக்கக்கூறினான். அதைக் கேட்ட அவன் ''உன் ஊர் இங்கிருந்து வெகு தூரத்தில் உள்ளது. உன்னால் இந்த ஆட்டை ஓட்டிக்கொண்டு போக முடியாது. இது உன்னை அங்கும் இங்குமாக ஓட வைத்து அலையச்



செய்யும். நான் சொல்வதைக் கேள். இந்த ஆட்டை என்னிடம் கொடுத்து விட்டு இந்தக் கோழியை வாங்கிக் கொண்டு போ. இது தினமும் நிறைய முட்டைகள் இடும். அவற்றிலிருந்து குஞ்சுகள் வெளிவரும். அவை வளர்ந் தால் விற்று லாபம் பெறலாம்'' என் றான்.

முருகனும் அதுவும் நல்ல யோசனையே என்று நினைத்து வெள்ளாட்டை அவனிடம் கொடுத்து விட்டுக் கோழிக் குஞ்சை வாங்கிக் கொண்டான். அவன் அங்கிருந்து கொஞ்ச தூரம் போனதும் ஒருவன் ஐந்தாறு கத்திகளைத் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஒரு கல்லில் ஒரு கத்தியைச் சாணை பிடித்துக் கொண் டிருந்தான்.

முருகன் அவனருகே நின்று பார்க் கவே அந்த மனிதனும் ''என்ன பார்க் கிறாய்? நான் சாணை பிடிப்பதையா? இந்த ஆறு கத்திகளையும் இந்தக் கல்லில் தீட்டிக் கூராக்கினால் எனக்கு மூன்று ரூபாய் கிடைக்கும். இதுதான் என் தினப்படி வருமானம்'' என்றான். முருகனும் ''அப்படியானால் எனக்கு இந்த மாதிரியான ஒரு கல்லைக் கொடுக்கிறாயா? உனக்கு அதற்கு பதிலாக இந்தக் கோழியைக் கொடுக் கிறேன்'' என்றான்.

அந்த மனிதனும் ஒரு கல்லுக்கு ஒரு கோழிக் குஞ்சு கிடைக்கிறதே என்று மகிழ்ந்து தன்னிடமிருந்த ஒரு சப் பட்டைக் கல்லை எடுத்துக் கொடுத்து விட்டுக் கோழிக் குஞ்சை வாங்கிக் கொண்டான்.

முருகன் அந்தக் கல்லுடன் தன் வீட்டை அடைந்து தன் தாயிடம் தான் வேலை செய்து சம்பாதித்த வெள்ளிக் கட்டிகளைப் பற்றி கூறி அதிலிருந்து தான் ஒவ்வொன்றாக மாற்றி வாங்கி யதை விவரமாகக் கூறினான். அதைக் கேட்ட அவளது தாயார் ''அட பைத் தியக்காரா! நல்ல வெள்ளிக் கட்டி களைக் கொடுத்து விட்டுக் கடைசி யில் இந்தக் கல்லைத்தான் கொண்டு வந்தாயா? சரி. நீ திரும்பி வந் தாயே. அது போதும். இந்த ஊரிலேயே ஏதா வது வேலை செய். நான் தடுக்க மாட் டேன்'' என்றான்.

முருகனும் மகிழ்ந்து அதே ஊரில் வேலை செய்து கை நிறையச் சம்பா தித்துத் தன் தாயாரோடு சுகமாக வாழ்ந்தான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. Seshagiri



S.G. Seshagiri

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ நவம்பர் 20–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **தண்ணீர் இன்றேல் திண்டாட்டம்.**

*இரண்டாவது போட்டோ* : **தண்ணீர் என்றால் கொண்டாட்டம்.**

*பரிசு பெற்றவர்* : **திரு அ. சங்கர், கோழிக்கோடு–2.**




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) November 1996 Regd. No. M. 4863